# வேலை நிறுத்தம் ஏன்?





மக்கள் எழுத்தாளர்

விந்தன்



# வேலை நிறுத்தம் ஏன்?

விந்தன்

விந்தன் நினைவு அறக்கட்டளை
17, அருணாசலம் தெரு,
செனாய் நகர்,
சென்னை - 600 030.
தொலைபேசி : 2668 04 36; 94441 45275

## நூல் விவரம்


| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | ➢ | வேலை நிறுத்தம் ஏன்? |
| ஆசிரியர் | ➢ | விந்தன் |
| மொழி | ➢ | தமிழ் |
| பொருள் | ➢ | கட்டுரைகள் தொகுப்பு |
| பதிப்பு ஆண்டு | ➢ | டிசம்பர், 2005 |
| பதிப்பு விவரம் | ➢ | முதல் பதிப்பு |
| உரிமை | ➢ | விந்தன் நினைவு அறக்கட்டளை (பதிவு பெற்றது) |
| தாளின் தன்மை | ➢ | 11.6 கி கி |
| நூலின் அளவு | ➢ | கிரௌன் (12 ½ X 18 ½ செ மீ ) |
| அச்சு எழுத்து அளவு | ➢ | 11 புள்ளி |
| பக்கங்கள் | ➢ | 156 |
| நூலின் விலை | ➢ | ரூ.45 |
| லேசர் வடிவமைப்பு | ➢ | எக்ஸ்பிரஸ் கம்ப்யூட்டர் |
| அச்சிட்டோர் | ➢ | ஜுபிட்டர் ஆர்ட் பிரிண்டர்ஸ் சென்னை - 24 |
| நூல் கட்டுமானம் | ➢ | போர்டு |
| வெளியிட்டோர் | ➢ | விந்தன் நினைவு அறக்கட்டளை சென்னை - 30 |

## பொருளடக்கம்









விந்தை எழுத்தாளர் விந்தன்



# முன்னுரை

என்னை "எழுத்தாளன்" என்று சொல்லிக் கொள்வதைவிடத் "தொழிலாளி" என்று சொல்லிக் கொள்வதில் நான் எப்பொழுதுமே பெருமை யடைபவன்.

ஏனெனில், என்றைக்காவது ஒருநாள் இந்த நாட்டு அரசியல், ஏன், உலக அரசியலே கூட – தொழிலாளர்களின் கைக்குத்தான் வந்து சேரப் போகிற தென்பதில் எனக்குச் சந்தேகம் கிடையாது. அப்படியிருக்கும்போது யார்தான் தன்னைத் "தொழிலாளி" என்று சொல்லிக் கொள்வதில் பெருமை யடையாமல் இருக்க முடியும்?

ஆனால், எந்தக் கட்சியையும் நான் சேர்ந்தவனல்லன் என்பதை இங்குத் தெளிவுபடுத்த விரும்புகிறேன்.

என்றாலும் எந்தக் கட்சி, தொழிலாளி களுடைய நலனுக்காகத் தன்னுடைய நேரத்தை அதிகமாகச் செலவிடுகிறதோ, எந்தத் தலைவர்கள், தொழிலாளிகளுடைய நலனுக்காகத் தங்கள் வாழ் நாட்களை அர்ப்பணம் செய்கிறார்களோ அந்தக்

கட்சியிடம், அந்தத் தலைவர்களிடம் என்றுமே எனக்கு அனுதாபம் உண்டு.

சமீபகாலத்தில், தமிழ்நாட்டில் (1945–46) எழுந்த வேலை நிறுத்தப் போராட்டங்களின்போது என் உள்ளத்தில் எழுந்த எண்ணங்களைத்தான் இந்தப் புத்தகத்தில் வெளியிட்டிருக்கிறேன். ஆனால் என்னுடைய எண்ணங்கள், அபிப்பிராயங்கள்தான் சரியானவை என்று நான் சாதிக்கவில்லை. அபிப்பிராய பேதங்களுக்குச் செவி சாய்க்காத யார்தான் உண்மையான ஜனநாயக வாதியாக வாழ முடியும்?

ஆகவே, இந்தப் புத்தகத்தைப் படிக்கும் நேயர்கள் என்னுடைய அபிப்பிராயங்களை அப்படியே ஒப்புக்கொள்ள வேண்டுமென்று நான் விரும்பவில்லை. ஆனால் படிக்கும் நேயர்களின் சிந்தனையை இந்தப் புத்தகம் சிறிதளவாவது தூண்டிவிட வேண்டுமென்றுதான் விரும்புகிறேன். என்னுடைய விருப்பத்தை இந்தப் புத்தகம் எவ்வளவு தூரம் நிறைவேற்றி வைக்குமோ நான் அறியேன்.

*விந்தன்*

*மதறாஸ்*
*14-1-1947*

# பதிப்பாளர் வார்த்தை

வேலைநிறுத்தம் தொழிலாளர்களின் சக்திவாய்ந்த ஆயுதம்; ஆனால், அதுதான் அவர்களின் கடைசி ஆயுதம். அதை உபயோகித்துத் தோல்வி யடையும் தொழிலாளர் களின் நிலை மிகப் பரிதாபகரமாய் இருக்கும்.

இதை உணர்ந்திருந்தும், தொழில் வளர்ச்சி இன்னும் அதிகரிக்காத நிலையிலுள்ள நம் நாட்டில், இந்த ஆயுதம் அடிக்கடி உபயோகிக்கப் படுகிறது

இதற்குக் காரணங்கள் பலவிருக்கலாம். அக்காரணங்களை எல்லாக் கோணங்களிலுமிருந்து ஆராய்வதற்கு ஒரு விரிவான நூல் வேண்டும்.

ஆனால், இச்சிறு நூலிலே தொழிலாளர்களின் கட்சியை மிக அழகாக எடுத்துச் சொல்கிறார் எழுத்தாளர் விந்தன்.

எழுத்தாளர் 'விந்தன்' அவர்கள் ஒரு நல்ல சிறுகதை எழுத்தாளர் என்றுதான் தமிழ் உலகம் அறியும். அவர் அரசியல், பொருளாதாரப் பிரச்சினைகளிலும் தீவிரமாகச் சிந்திக்கிறார் என்பதற்கு இச் சிறுநூல் ஒரு சான்று.

இந்நூலைத் தமிழ்மக்களின் முன்னால் வைப்பதில் பெருமை கொள்கிறோம்.

*முன்வாயிலில்...*

# சிந்தித்தால் சிறப்போம்! நிந்தித்தால் இழப்போம்!

*போராட்டங்கள் தொடரலாமா? தொழில்களும் பொருளாதாரங்களும் வாழ்க்கையின் வேரோட்ட மல்லவா?*

*வேர்களும் விழுதுகளும் தொடர்புடைய உறவுடையன.*

*உழைப்பின் பலனை உழைப்போர் கேட்பது தவறாகுமா? வேலைநிறுத்தங்கள் என்னும் நிலையே தவிர்க்க வேண்டியதாகும்.*

*சமுதாய அமைப்பு என்பதே மனிதவாழ்வின் மகத்தான வளர்ச்சியைக் குறிப்பதாகும்.*

*அறிவால் வளரும் மனித இனம், தமக்குத் தாமே சில கடமைகளை வரையறுத்துள்ளது. அது சில உரிமைகளை, உடைமைகளை அடையப் பாடுபடுகிறது.*

*எந்தெந்த வழிகளில் மனித ஆற்றல் இயங்க வேண்டும், எவ்வாறெல்லாம் தடைகளை அகற்ற வேண்டும் என்கிற எண்ணங்களும் குறிக்கோள்களும் எப்பொழுதும் நீடித்துக்கொண்டே இருப்பதாகும்.*

*மனிதர்களின் கூட்டு முயற்சியும் கூட்டுறவான வாழ்வும் மகத்தான வழிமுறைகளாகும்.*

*சமுதாயத்தில் எவரும் தவிர்க்க முடியாதவர்கள்; தனித்தியங்க, தனித்து நிற்க, தனித்து ஒதுங்க எவராலும் இயலாது.*



ஒட்டு மொத்த சமுதாயமே மனித குல அமைப்பு. இதை ஒவ்வொருவரும் உணர்தல் வேண்டும்.

மனிதகுலம் முழுமைக்கும் ஒரு நல்வழியைத் தேடி ஆய்ந்து முடிவாக அறிவித்தவர், மனித குலத்தின் ஆற்றல் மிக்க சிந்தனையாளர் காரல் மார்க்ஸ்.

சிறு சிறு குழுக்களின், சிறு சிறு நாடுகளின் வளர்ச்சியிலும், தனிமனிதனின் உழைப்பிலும் வளர்ச்சியிலும் முழுமையான சிந்தனை செய்து முடிவுகண்டு முதலில் உரைத்தவர் அறிஞர் கார்ல் மார்க்ஸ்!



உழைக்க வேண்டும்; பலன் காண வேண்டும்; அதில் தடையோ, ஏமாற்றுதலோ, வஞ்சித்தலோ சுரண்டுதலோ, வேறு எதுவுமே தோன்றக் கூடாது. தோன்றினால் அதைத் துரத்த வேண்டும்; அழிக்க வேண்டும்.

மனித மனம் பலவிதப் பாய்ச்சல்களைக் கொண்டதாகும். சிந்திக்கும் ஆற்றல் மிகப் பெரிய வலுவுடையதாகும்

எப்படி, எப்பொழுது, என்னென்ன வழிகளில் சிந்தனைப் போக்குகள் மாறும், செயல்படும் என்பதை எளிதில் அறிய இயலாது; கூற இயலாது. நொடிதோறும் வளர்ந்து நீளும் பெரும் வீச்சுடையது மனித மனம்.

நம் மனித மனம் காட்டாறா? சுழற்காற்றா? புயற்காற்றா? ஆழிச் சீற்றமா? அடைமழையா? சிறு தூறலா? பனியா, பனிப்பொழிவா?

இளங்காலைப் பொழுதா? பகல்வெயிற் பொழுதா? மயக்கும் மாலையா? மருட்டும் இரவா? இவை எல்லாமா?

*எத்தனை வகை மாற்றங்கள்! இயற்கையின் இயல்பை எழுத்தில் வடித்துக் காட்ட முடியுமா?*

*மனித மனமும் மனித ஆற்றலும், பேராற்றல் மிக்க இயற்கையைப் போன்றதே எனலாம்.*

*எது எப்பொழுது எப்படி நிகழும் என்பதை வரையறுத்துக் கூற வல்லார் யார்? வகை யாது?*

*விடை காண முடியாத வினாக்களே மிகுதி! இதுவே வாழ்வு! இதுவே உலகம்!*

*இத்தகைய உணர்வுகளோடு வாழ்வையும் சமுதாயத்தையும் நோக்கினால், சமநிலை தோன்றும்! சண்டை சச்சரவு எனும் சங்கடங்கள் வாரா. வந்தாலும் விலகும்.*

*நாம் நமக்காக அமைத்துக் கொண்ட சமுதாயக் கட்டுப்பாடுகளை, வரம்புகளை அறிவார்ந்த தெளிவுடன் கண்டறிதலே முதற்கடமை.*

*யாரும் யாருக்கும் அடிமையில்லை; எவரும் எதற்கும் தடையாய் இருக்கக் கூடாது. எதுவும் தடைப்படுத்தக் கூடாது.*

*மனித உடலுறுப்புகள் இயங்கும் பாங்கினைப் பார்ப்போம்.*

*எது உயர்ந்தது? எது சிறந்தது? எவ்வுறுப்பு தாழ்ந்தது? எதன் பணி குறைவானது?*

*உடல் உறுப்புகளில் ஒன்று குறைவு பட்டாலும் துன்பம்தானே?*

*நாம் உருவாக்கிய மணிப்பொறியில் ஒரு சிறு கருவி பழுதுபட்டாலும் மணிகாட்டும் பணி தடைப்படும் அல்லவா?*



சிறிய மணிப்பொறி ஒன்று மெதுவாய் இயங்கினாலும் தவறு நேர்கிறது. வேகமாய் இயங்கினாலும் தடுமாற்றம் ஏற்படுகிறது

மனிதக் குடும்பங்களிலும், மனிதர்களின் கூட்டமைப்பிலும் இத்தகைய விளைவுகளே தோன்றுகின்றன

எல்லாம் நமக்காக! எல்லாரும் ஒன்றாக! எல்லாரும் சமமாக!...

இந்நிலையே அறிவுநிலை! அரிய நிலை! அமைதிக்குரிய நிலை!

உயர்வு என்பதும் தாழ்வு என்பதும் உணர்வுகளின் ஊனத் தன்மையாகும். ஒற்றுமை என்பதும், ஒருநிலை, சமநிலை என்பதும் உண்மையானவை; உரிமையானது! உயர்வானது!

மேலவர் கீழவர் என்பதும், முதலாளி தொழிலாளி என்பதும் இருவேறு மாற்றங்கள். இரண்டு நிலைகளும் ஒன்றின் கூட்டே. இரு பக்கங்களில் வேற்றுமை ஏது? செயலும் பயனும் தொடர்புடையனதாமே!

அது போலவே அரசும் அமைப்புகளும் வேற்றுமை யுடையன அல்ல; வேறு வேறு என்பதும் அல்ல. ஒன்றன் கூறு மற்றொன்று. உடல் உறுப்புகளை ஒத்தவையே ஆட்சி அமைப்பும்

நோய் வாராமல் கருத்தோடு இருப்பது முதற் கடமை; பொறுப்பு; அறிவுடைமை!

நோய் தோன்றத் தொடங்கினால் தொடக்கத்திலேயே கண்டறிந்து தீர்க்க முயல வேண்டும். மனிதர்க்கு உரியதே சமூகத்திற்கும் பொருந்தும். தொழிற் கூடங்களுக்கும் பொருந்தும்; ஆட்சிச் செயலரங்குக்கும் பொருந்தும்.



நீயா, நானா என்பதும், உயர்வு தாழ்வு என்பதும், அமைப்புகளின் வேர்களைப் பறிக்கின்ற தீயவுணர்வுகளாகும்.

நாம் அனைவரும் சமமானவர்கள். பாரத சமுதாயம் எனப் பாரதி பாடியதைப் பாடுவதோடு நிற்காமல், பாராட்டுவதோடு நிற்காமல், சிந்தித்துச் செயலில் கைக்கொள்ள வேண்டும்.

குறைகள் தோன்றா வண்ணம் இருப்பதே திறமுடைய அமைப்பாகும் தோன்றினால், அதை அறிந்து உடனடித் தீர்வு காண வேண்டியதும் பொதுப் பொறுப்பாகும்.

தனி நிர்வாகமோ, பொது நிர்வாகமோ, அரசு நிர்வாகமோ எதுவாயினும் மனிதரையே சார்ந்து உள்ளது. மனிதத் தேவையும். மனித உரிமையும், மனிதர்தம் மன நிறைவும் கருதப்பட வேண்டும்; காக்கப்பட வேண்டும்.

தேவை என்பது ஒரு புறமும் தீர்வு என்பது மறுபுறமுமாய், இணையாமல் பிரிந்து நிற்கக் கூடாது. இணைந்தே, சேர்ந்தே இயங்க வேண்டும்.

குறை எனில் உடனே களையப்பட வேண்டும். 'நாம் அந்த நிலையில் இருந்தால்...?' எனும் கருத்து ஒவ்வொருவரிடமும் நிலைபெற்று இருக்க வேண்டும்.

போராட்டங்களால் தீர்வு தேடும் முறை பண்பட்ட சமுதாயத்தை உருவாக்காது; பொதுமை எனும் நிலை இல்லை என்பதே வெளிப்படும்.

குறைகளைக் கேட்க, பரிவாகக் கவனிக்க, முறையாகச் செயல்பட, நிலைமை புரிந்து கொள்ளத் தக்கதாக, இரு சாராரும் இணைந்து



செயல்பட்டு, ஒத்த முடிவு காணும் நிலையே உருவாக வேண்டும்

அந்நியர் ஆளும் போதும் ஏற்றத் தாழ்வு; கெடுபிடிகள்; அடக்குமுறைகள்! நமது ஆட்சியிலும் அத்தகு பழைய நிலைகளே நீடிக்க அனுமதிக்கலாமா? இது வளர்ச்சியைக் காட்டுகிறதா?

கேட்பதும் மறுக்கப்படுவதும் சமநிலையாகாது. வேண்டுகோளும் புறக்கணிப்பும் வெறுப்பை வளர்க்கும்; பகைமையை உருவாக்கும். அலட்சியமும் தட்டிக் கழித்தலும் சமுதாய நீதியாகாது. ஆர்ப்பாட்டமும் போராட்டமும் தோன்றாமல் முளையிலேயே முறைமை காண முற்பட வேண்டும். கேட்பது சிறுமை என்பதோ, மறுப்பது பெருமை என்பதோ, தகுதி என்பதோ சரியான நெறிகளாகா.

பலமுறை கேட்டும் பயன் காணாமல் பதற்றமும் வெறுப்பும் கொள்ளும் நிலை தோன்றக் கூடாது அந்நிலை ஏற்பட வழி செய்வோர், அவ்வகையில் சரியாகச் செயல்படவில்லை என்பதே வெளிப்படும். அது குறையுடைய நிர்வாகம் எனத் தக்கது; கண்டிக்கத் தக்கதாகும். அத்தகைய இருட்டடிப்பு நிலைமை களையப்பட வேண்டும்.

மனம் ஒன்றி, நமக்காக நாம் என்ற உணர்வோடு கலந்து முடிவு காண வேண்டும்.

பிரிந்து நின்று பேதம் வளர்க்கக் கூடாது. பிளவுகள் தோன்ற எவ்வகையிலும் இடம் தரக் கூடாது.



நம் சொந்த உடலுறுப்பில் சிறு நோய் கண்டால் எவ்வாறு தாமதமின்றி, தக்கவாறு கவனிப்போமோ அவ்விதமே ஒவ்வொரு கட்டத்திலும் நாம் ஒவ்வொரு துறையிலும் செயல்பட வேண்டும்.

நாம் ஒருகூட்டுப் பறவைகள் என்னும் பாச உணர்வோடு பொதுக் காரியங்களில், நட்புறவுடன் நிலைமைகளை அணுகவேண்டும்; ஆராய வேண்டும். அறிவும் ஆற்றலும் அன்புறவோடு ஆக்கம் புரிய வேண்டும். இதுவே அறிவறிந்த, பண்பாடு மிக்க மனிதத் தன்மையாகும். மனித வாழ்க்கை நெறியாகும்.

இத்தகைய ஒத்த உணர்வோடு நாம் அனைவரும் ஒன்றி உறவாடிச் செயல்பட்டு ஒருமித்த சமுதாயமாக வாழ முற்பட வேண்டும். அதற்குரிய சிந்தனையை எழுத்தாளர், சிந்தனையாளர் விந்தன் அவர்கள் குறித்துக் காட்டியுள்ளார்.

'தெருவிளக்கு' எனும் முற்றுப் பெறாத கதையும் இணைந்துள்ளது. எனினும் முழுக் கதையாய்த் தெரிகிறது. படித்துச் சுவையுங்கள்.

அறுபதாண்டுகட்கு முன்னர் அவர் தந்துள்ள கருத்துகள் இன்னும் பயன் தரத் தக்கவையாய் உள்ளன. அவர்தம் பொதுநோக்கை நாம் பொறுப்போடு புரிந்து, நாம் ஏற்றத் தாழ்வு அகற்றி, எல்லோரும் ஒரு குடும்பம் என்று எண்ணி, இணைந்து வாழ முற்படுவோம்.



*அன்புடன்*

**கோ. ஜனார்த்தனன்**

*விந்தன் அறக்கட்டளை*



உழவுக்கும் தொழிலுக்கும்
வந்தனை செய்வோம் - வீணில்
உண்டுகளித் திருப்போரை
நிந்தனை செய்வோம்!

விழலுக்கு நீர்பாய்ச்சி
மாய மாட்டோம் - வெறும்
வீணருக் குழைத்துடலம்
ஓய மாட்டோம்.

-மகாகவி பாரதியார்



# 1
# வேலை நிறுத்தம் ஏன்?

இன்று எங்கு நோக்கினும் வேலை நிறுத்தம்.

பஞ்சாலைத் தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்கிறார்கள்: பஸ் தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்கிறார்கள்; ரயில்வே தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்கிறார்கள்; டிராம்வே தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்கிறார்கள்.

இன்னும் சர்க்கார் சிப்பந்திகள், தபால் இலாக்கா ஊழியர்கள், ஹோட்டல் பாட்டாளிகள், கார்ப்பொரேஷனைச் சேர்ந்த நகரச் சுத்தித் தொழிலாளிகள், துறை முகத்தைச் சேர்ந்த கூலிகள், எதிலும் சேராத ரிக்ஷாவாலாக்கள் - இவர்களோடு சேர்ந்து

கொண்டு, "எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும்" என்னும் முதுமொழிக்குப் பாத்திரமான உபாத்தி யாயர்கள்கூட வேலை நிறுத்தம் செய்கிறார்கள்!

போகட்டும்;

இவர்களுக்காவது சர்க்கார் சட்டத்தை நிலை நாட்டும் பொறுப்போ, நாட்டின் அமைதியைக் காக்கும் கடமையோ ஒன்றும் கிடையாது.

அந்தப் பொல்லாத போலீஸார் இருக்கிறார்களே, அவர்களுக்குக் கூடவா மேற்கூறிய பொறுப்பும் கடமையும் இல்லாமற் போய்விட்டன?

தங்களை நம்பியிருக்கும் சர்க்காரை அவர்கள்கூடக் கைவிட்டு விடுவார்கள் என்று யாராவது எதிர்பார்த்து இருக்க முடியுமா?

ஆனாலும் என்ன, அந்த எதிர் பாராத அதிசயம் ஒரு நாள் நடந்தே நடந்துவிட்டது.

அன்று போலீஸார் வேலை நிறுத்தம் செய்ததோடு நில்லாமல், தாங்கள் அத்தனை நாளும் பெற்று வந்த அதி மர்மமான சம்பள விகிதத்தையும் அம்பலப்படுத்தி, சர்க்காரின் மானத்தை வாங்கி விட்டார்கள்! (அரசு இயந்திரங்களின் செயல்பாட்டைக் குறிப்பிடுகிறார். இன்றும் இந்நிலை தொடர்கிறதே!)

*இந்த வேலை நிறுத்தங்களின் காரணமாகத் தொழிலாளிகள் அடைந்த லாப நஷ்டங்கள் ஒருபுறம் இருக்கட்டும்.*

*இவற்றுக்கெல்லாம் காரணம் என்ன?*

*சில சுயநலவாதிகள் சொல்வது போன்று தொழிலாளிகளின் அவசரப் புத்திதான் இவற்றுக் கெல்லாம் காரணம் என்று சொல்லிவிட முடியுமா? முடியாது !*

*பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் சதியும், ❁ முதலாளி வர்க்கத்தின் பேராசையுந்தான் மேற்கூறிய வேலை நிறுத்தங்களுக்கெல்லாம் காரணம் என்று சொல்ல வேண்டும்.*



❁ இது எழுதப்பட்ட காலம் 1946, நூல் வெளியீடு: ஜனவரி, 1947



# 2

# ஏகாதிபத்தியத்தின் சதி

**தொ**ழில் வளர்ச்சியிலும் பொருளாதாரத் துறையிலும் இந்தியா தங்களுக்குச் சமமாகத் தலை தூக்குவதைப் பிரிட்டிஷார் எப்பொழுதுமே விரும்புவது இல்லையென்பது எல்லோரும் அறிந்த விஷயம்.

ஆனால், ஜப்பான் குள்ளர்கள் இந்தியாவின் வாயிலில் காலடி எடுத்து வைத்தபோது, பிரிட்டிஷார் தங்கள் சுயநலக் கொள்கையை ஓரளவாவது மாற்றிக் கொள்வார்கள் என்று நாம் எதிர்பார்த்தோம்.

நாம் எதிர்பார்த்தபடி பிரிட்டிஷார் ஒன்றும் செய்ய வில்லை.

---

✽ இரண்டாம் உலகப் போர்க்காலத்தைத் தொடர்ந்த நிலை

முக்கியமாக, இந்தியத் தொழிற்சாலைகளின் எண்ணிக்கையைப் போதுமான அளவு அதிகரிக்கச் செய்யவில்லை

வெளிநாடுகளிலிருந்து புதிய இயந்திரங்களை வரவழைத்து, இந்தியாவின் உற்பத்திச் சக்தியைப் பெருக்குவதற்கு அவர்கள் முயற்சி செய்யவில்லை - அவர்கள் செய்யாததோடு மட்டுமல்ல ; அமெரிக்கா போன்ற அன்னிய நாடுகளின் மூலம் இந்தியா தொழில் வளம் அடைவதையும் அவர்கள் விரும்பவில்லை.

தங்களுக்கு இருக்கும் அரசியல் அதிகாரத்தைக் கொண்டு இந்த அடிமை நாட்டில் அதற்கும் முட்டுக்கட்டை போட்டுத் தடுத்தனர்!

இத்தகைய மனோபாவம் கொண்டவர்கள் இந்தியாவை யுத்த முயற்சியில் ஈடுபடுத்தாமலாவது இருந்திருக்கலாமல்லவா? அதுவும் இல்லை.

இந்தியாவில் ஏற்கெனவே இருந்த தொழிற் சாலைகளைக் கொண்டே தங்கள் யுத்த காலத் தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளப் பெரும் முயற்சி செய்தனர்.

*இதன் பயனாக, இந்தியத் தொழிற்சாலைகளில் வேலை செய்வோரின் எண்ணிக்கை மட்டும் அதிகரித்தது.*

*ஆனால், அதன் மூலம் இந்தியாவின் தொழில் அபிவிருத்தி அடைந்ததா என்றால், அதுதான் இல்லை!*

*ஆகாய விமானங்கள், கப்பல்கள், மோட்டார் லாரிகள் முதலியவற்றைச் செய்யும் பயிற்சி இந்தியத் தொழிலாளிகளுக்கு அளிக்கப்படவில்லை; இங்கிலாந்தில் இருந்தும், அமெரிக்காவிலிருந்தும், ஆஸ்திரேலியாவில் இருந்தும் வரும் மேற்கூறியவற்றின் தனித் தனிப் பாகங்களை ஒன்று சேர்க்கும் பயிற்சிதான் அவர்களுக்கு அளிக்கப்பட்டது.*

> "இந்த யுத்த காலத்தில் இந்தியா தனக்கு வேண்டிய வற்றில் பெரும் பாகத்தைத் தானே உற்பத்தி செய்து கொள்ளப் போகிறது!"

*என்று அப்போது இந்தியா மந்திரியா யிருந்த கர்னல் அமெரி, பார்லிமெண்ட் சபையில் பெருமையுடன் கூறிக்கொண்டார்.*

*அந்தப் பெரும்பாலானவை என்னென்ன தெரியுமா?*

வெடிகுண்டு மருந்துகள், கூடாரங்கள், கம்பளிச் சட்டைகள் , கண்ணாடிச் சாமான்கள், பித்தான்கள், துணிமணிகள் முதலியவைதான்!

இவற்றையெல்லாம் அதிகப்படியான தொழிலாளி களின் ஓயாத உழைப்பைக் கொண்டு பிரிட்டிஷார் பெற்றதற்குப் பதிலாக, இந்தியாவின் இயந்திர சாதனங் களைப் பெருக்கி, அதன் உற்பத்திச் சக்தியை அதிகப் படுத்தியதன் மூலம் பெற்றிருந்தால், நம் நாட்டில் இப்போது எதற்குமே பஞ்சம் ஏற்பட்டிருக்க முடியாது.

இராணுவத்திற்குப் போனது போகப் பொது மக்களுக்கு வேண்டிய பொருள்கள் கிடைத்திருக்கும்.

பிரிட்டிஷாரும் யுத்தத்திற்கு வேண்டியவற்றை இந்தியாவிலிருந்து வாங்குவதற்காக ஏராளமான காகித நோட்டுகளை அச்சடித்துக் கொடுத்திருக்க வேண்டாம்.

அதன் மூலம் விலைவாசிகள் விஷம்போல் ஏறுவதற்கும், பதுக்கல்முறை, கள்ளமார்க்கெட், லஞ்சப் பேய் முதலியவை தலைவிரித்தாடுவதற்கும், ஏழை மக்கள் உண்ண உணவின்றி, உடுத்த உடையின்றித் தவிப்பதற்கும், கல்கத்தாவில் முப்பத்தைந்து லட்சம்

பேர் கஞ்சியின்றிச் சாவதற்கும் இடம் கொடுத்திருக்க வேண்டாம்.

தங்களுடைய சுயநலக் கொள்கையினால் இந்தியா இத்தனைக் கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளாக நேருமென்பது பிரிட்டிஷாருக்கு ஏற்கெனவே தெரியாத தல்ல; தெரிந்துதான் அவ்வாறு செய்தார்கள்.

அதுவும் அச்சு நாடுகளின் மூலம் தங்கள் ஏகாதிபத்தியத்துக்கு ஆபத்து நேரும்போலிருந்த சமயத்திலே அவ்வாறு செய்தார்கள் என்றால், எந்த இந்தியன்தான் அவர்கள் இந்த நாட்டில் இருப்பதை விரும்ப முடியும்?





# 3

# முதலாளி வர்க்கத்தின் பேராசை

ஏகாதிபத்தியத்தின் சதி ஏழைகளைத்தான் பாதித்தது; பணக்காரர்களைப் பாதிக்கவில்லை.

பாடுபடும் ஏழை எலும்புந் தோலுமாகி மடியவும், பாடுபடாத பணக்காரன் பருத்திப் பொதியைப் போன்று வளரவும், பிரிட்டிஷாரின் சுயநலக் கொள்கை இடம் கொடுத்தது.

இந்திய முதலாளி வர்க்கமும், வர்த்தக வர்க்கமும் பிரிட்டிஷாரின் கணக்கற்ற காகித நோட்டுகளைக் கைநிறைய பெற்றுக் கொண்டு, அவர்களுடைய ராணுவத் தேவையைப் பூர்த்தி செய்வதிலேயே கண்ணுங் கருத்துமாயிருந்தன.

*ஏழை ஜனங்கள் எக்கேடு கெட்டுப் போனாலும் போகட்டும் என்று அவர்கள் ஏகாதிபத்தியத்தின் சதிக்குத் துணையாக நின்றனர்.*

*இந்தச் சமயத்தில் பொது ஜன நன்மைக் கென்று இந்திய சர்க்கார் கொண்டு வந்த விலைக் கட்டுப் பாட்டுத் திட்டங்கள், 'பிள்ளையையும் கிள்ளிவிட்டுத் தொட்டிலையும் ஆட்டுவதைப் போல் அமைந்தன.*

*நேற்று வரை நம் கண்ணுக்கு முன்னால் காட்சியளித்துக் கொண்டிருந்த பொருள்களெல்லாம் இன்று கண்ணுக்குத் தெரியாமல் மறைய ஆரம்பித்தன. கள்ள மார்க்கெட் தலையெடுத்தது.* ❁

*முதலாளி வர்க்கமும், வர்த்தக வர்க்கமும் தங்கள் கனவிலும் காணாத லாபக் கொள்ளையைக் கண்டன.*

*வரி வாய்தாக்கள் மூலம் ஏகாதிபத்தியத்தின் கஜானாவையும் வேண்டிய மட்டும் நிரப்பின.*

---

❁ அன்றைய கொடுமை நிலைகளை இக்கால இளைஞர் உலகம் அறியாது; முதியோர், கண்ட காட்சியை மறந்திரார்

இந்த அக்கிரமத்தை, அநீதியை யாராவது எடுத்துக் காட்டும்போது, "வியாபாரம் என்றால் குறைந்த விலைக்கு வாங்கி அதிக விலைக்கு விற்பது தானே!" என்று சில தேசபக்த சிகாமணிகள் சாதித்தனர்.!

யுத்தம் ஆரம்பித்த மூன்று வருட காலத்துக்குள் இந்தியக் கம்பெனிகளின் லாபம், ஒன்றுக்கு ஐந்து மடங்கு, ஆறு மடங்கு என்று உயர்ந்தது.

ஆனால், அத்தகைய லாபக் கொள்ளைக்குப் பெரிதும் காரணமாயிருந்த தொழிலாளிகளின் சம்பளமோ ஒன்றுக்குப் பாதிகூட உயரவில்லை.

இந்த நிலையில் கஷ்டப்படும் தொழிலாளி களுக்குக் கருப்பு மார்க்கெட் தெய்வம் காட்சியளிக்க வில்லை. ஆகவே தங்களுக்கு வேண்டியவற்றை வெள்ளை மார்க்கெட்டில் பெற்று அவர்களில் பெரும்பாலோர் உயிர் வாழ முடியவில்லை.

பிரிட்டிஷாரின் சுயநலக் கொள்கையினாலும். இந்திய முதலாளிகளின் பேராசையினாலும், தொழிலாளிகள் யுத்த காலத்தின் போதுதான் கஷ்டப்பட்டார்கள்

என்றால், சமாதான காலத்திலும் அவர்களைப் பிடித்த கஷ்டம் விட்டபாடில்லை.

யுத்த காலத்தின் போதாவது வாழ்க்கைக்கு அத்தியாவசியமான பொருள்களை வாங்குவதற்குப் போதுமான சம்பளம் கிடைக்காமல் கஷ்டப்பட்டனர்.

சமாதான காலத்திலோ மேற்கூறிய கஷ்டத்தோடு வேலையில்லாத கஷ்டமும் சேர்ந்து கொண்டது; சேர்ந்து கொள்ளப் போகிறது

இந்தியாவின் இயந்திர சாதனங்களைப் பெருக்காமலும், உற்பத்திச் சக்தியை அதிகரிக்காமலும், அதிகப்படியான தொழிலாளிகளின் ஓயாத உழைப்பைக் கொண்டு யுத்த காலத்தில் பிரிட்டிஷார் தங்கள் இராணுவத் தேவையைப் பூர்த்தி செய்து கொண்டதோடு, இந்திய முதலாளி வர்க்கத்தையும், வர்த்தக வர்க்கத்தையும் காகித நோட்டுக் கடலில் மூழ்கடித்தார்களல்லவா?

அதன் பலனாக, பிரிட்டிஷ் சர்க்காருக்கோ இந்திய முதலாளி வர்க்கத்துக்கோ சமாதான காலத்தில் நஷ்ட மொன்றும் ஏற்படவில்லை; ஏற்படப் போவதுமில்லை.

அவர்களுடைய நலனுக்காக அல்லும் பகலும் அனவரதமும் உழைத்து இளைத்த உழைப்பாளி வர்க்கத்துக்குத்தான் கஷ்ட நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது; ஏற்படப் போகிறது

யுத்தகாலத்தில் இராணுவத் தேவையைப் பூர்த்தி செய்து கொடுத்த அதிகப்படியான தொழிலாளிகள், சமாதான காலத்தில் இராணுவத் தேவையில்லாததால் வேலையில்லாமல் கஷ்டப்படுகின்றனர்; கஷ்டப்படப் போகின்றனர்.

இந்த வேலையில்லாத் திண்டாட்டத்தைப் பேராசை பிடித்த முதலாளி வர்க்கம் தன்னுடைய சுயநலத்திற்காகப் பயன்படுத்திக் கொள்கிறது; பயன்படுத்திக் கொள்ளப் போகிறது

வாழ்க்கைச் செலவுக்குப் போதிய வருவாய் இல்லாத தொழிலாளிகள் சம்பள உயர்வு கோரி வேலை நிறுத்தம் செய்யும்போது, முதலாளிகள் வேலையில்லாத தொழிலாளிகளை அவர்களுடன் போட்டிக்கு விடுகின்றனர்; விடப் போகின்றனர்!

இந்தியாவில் இந்து - முஸ்லிம் சச்சரவை உண்டாக்கித் தங்கள் ஏகாதிபத்தியத்தைப் பாதுகாத்துக்

*கொள்ளப் பார்க்கும் பிரிட்டிஷாரைப் போல, இந்திய முதலாளிகள் வேலையிலிருப்போருக்கும் வேலையில்லாதாருக்கும் இடையே சச்சரவை உண்டாக்கித் தங்கள் முதலாளித்துவத்தைப் பாதுகாத்துக் கொள்ளப் பார்க்கிறார்கள்.*

*ஆனால், இரண்டும் பகற்கனவுகள்தான் என்பதில் யாருக்கும் சந்தேகம் இருக்க முடியாது.*

*ஆமாம்!*

அரசியல் அதிகாரம் எந்தக் கட்சியிடம் இருந்தாலும் சரி, மேற்கூறிய இரண்டு நோக்கங்களும் என்றும் நிறைவேறாத நோக்கங்களே. !





# 4

# வாழ்வதா, சாவதா ?

இந்தக் காலத்தில் சம்பள உயர்வு கோரி வேலை நிறுத்தம் செய்யும் தொழிலாளிகளை ஈவிரக்கமின்றி எதிர்க்கும் புண்ணியவான்கள், அவர்களுடைய வாழ்க்கைத் தேவையைப் பற்றிக் கொஞ்சமாவது யோசித்துப் பார்க்க வேண்டும்

சர்க்கார் கொடுக்கும் ரேஷன் விகிதப்படி ஓர் ஆசாமிக்கு மாதம் ஒன்றுக்கு ஏழு படி அரிசி ஆகிறது

ஒவ்வொரு குடும்பத்திலும் புருஷன், மனைவி, வயோதிகத் தாய் அல்லது தந்தை, குழந்தைகள் - இல்லை யென்றால், வயது வந்த தங்கைமார், அல்லது விதவைச் சகோதரி - ஆகக் குறைந்த பட்சம் ஐந்து ஜீவன்களாவது இருக்கும்

அந்த ஐந்து ஜீவன்களுக்கும் சர்க்காரின் அரை வயிறு நிரம்பக் கூடிய ரேஷன் விகிதப்படி பார்த்தாலும்

மாதம் முப்பத்தைந்து படி அரிசியாவது கட்டாயம் வாங்கியாக வேண்டும்.

முப்பத்தைந்து படி அரிசியின் தற்காலக் கட்டுப் பாட்டு விலை ஏறக்குறையப் பதினைந்து ரூபாய் ஆகிறது.

இன்னும், போதாக் குறைக்குக் கள்ள மார்க் கெட்டில் ஒன்றுக்கு இரண்டு மூன்று மடங்கு விலை கொடுத்து அரிசி வாங்கவேண்டிய அவசியமும் தொழிலாளிகளுக்கு ஏற்படாமற் போகவில்லை.

அரிசிக்கு மட்டும் பதினைந்து ரூபாய்க்கு மேல் செலவாகிவிட்டால், அப்புறம் உப்பு, பருப்பு, மிளகாய், புளி, எண்ணெய் முதலிய பலசரக்குச் சாமான்க ளெல்லாம் வேண்டாமா?

அதற்காகக் குறைந்த பட்சம் இந்தக் காலத்தில் பத்து ரூபாயாவது வேண்டும்.

என்னதான் சிக்கனமாகச் செலவு செய்தாலும் தற்காலம் கறிகாய்க்கு மாதம் பதினைந்து ரூபாயாவது வேண்டும்.

இவற்றையெல்லாம் வேக வைத்துத் தின்பதற்குச் சர்க்கார் கொடுக்கும் ரேஷன் விறகு மட்டும் போதாது; வேறு வகையிலும் வாங்கியாக வேண்டும்.

வேறு வகை என்றால் என்ன? கள்ள மார்க்கெட் தான்! இதற்கு மாதம் ஐந்தாறு ரூபாயாவது ஆகும்.

எண்சாண் உடம்புக்கு எட்டுக்கு எட்டு அடி உள்ள ஒரே ஒரு அறையில் குடியிருந்தாலும்கூட, அந்த அரண்மனைக்கு மாதம் ஐந்நூறு ரூபாய் இல்லாமல் எந்த வீட்டுக்கார மகானுபாவனும் விடமாட்டான். !

வறுமையின் காரணமாக ஒட்டி உலர்ந்துபோன தன் தாயின் ஸ்தனத்தைப் பற்றிப் பற்றி இழுத்தும் ஒரு சொட்டுப் பால்கூடக் கிடைக்காமல் கதறும் குழந்தைக்குத் தினசரி உழக்குப் பாலாவது வேண்டும். அதற்காக மாதம் ஏழரை ரூபாய் ஆகிவிடும். இவை தவிர, வியாதி வந்தால் வைத்தியச் செலவு,

சலவைக்கூலி, ஷவரக்கூலி,
புடவை, துணிமணிகள்,
கல்யாணம், உத்திரகிரியை,
திவசம், பண்டிகை

முதலியவை யெல்லாம் இருக்கவே இருக்கின்றன!

இத்தனை செலவுகளுக்கும் ஓர் ஏழைத் தொழிலாளி எப்படி ஈடு கொடுப்பான் என்பதை யுத்த காலத்தில் அபரிமிதமான லாபக் கொள்ளையடித்த

முதலாளிகள் சிறிதாவது சிந்தித்துப் பார்க்கின்றார்களா? கிடையவே கிடையாது !

பதை பதைக்கும் வெயிலில் நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபடும் ரயில்வே காங்கிக் கூலிக்குப் பன்னிரண்டு ரூபாய் மாதச்சம்பளம் கொடுக்கிறார்கள்!

இரவு பகல் என்று பாராது ரயில்வே ஸ்டேஷனி லேயே பழியாய்க் கிடக்கும் 'பாய்ண்ட்ஸ்மே'னுக்குப் பதினெட்டு ரூபாய் மாதச் சம்பளம் !

பஞ்சாலையில் நாள் முழுவதும் மூச்சுத் திணறப் பாடுபடும் பாட்டாளிக்கும் மாதம் பதினெட்டு ரூபாய் தான் சம்பளம். !

ஏறக்குறைய அதே சம்பளந்தான் 'ஹேட்'டும் 'பூட்'டும் போட்டுக்கொண்டு மிரட்டல் உருட்டல் களுடன் வேலை பார்க்கும் போலீஸ்காரர்களுக்கும்!

இந்த 'எழுத்தறிவிக்கும் இறைவன்' மார்கள் இருக்கிறார்களே, பஞ்சகச்சம் வைத்துக் கட்டிக் கொண்டு, சட்டையும் தலைப்பாகையும் போட்டுக் கொண்டு - அவர்களுக்கு என்ன சம்பளம் தெரியுமா? மாதம் பதினாறு ரூபாயும் பதினெட்டு ரூபாயுந்தான் !

இந்த லட்சணத்தில்தான் பெரும்பாலான தொழிலாளிகள் இன்றுவரை சம்பளம் பெற்று

வருகிறார்கள். இந்த அழகான சம்பள விகிதத்துடன் இப்போது பஞ்சப்படியும் பலவிதமாகக் கொடுக்கப் படுகிறதென்பதை யாரும் மறுக்கவில்லை; மறக்கவும் இல்லை.

ஆனாலும் விலைவாசிகள் விஷம்போல் ஏறியிருக்கும் இந்தக் காலத்தில் மேற்கூறிய சம்பள விகிதங்கள், பஞ்சப்படிகள் எல்லாம் எந்த மூலைக்கு?

இவ்வாறு எத்தனை நாட்கள், வாரங்கள், மாதங்கள், வருடங்கள் - தொழிலாளிகள் பொறுமையுடன் காலம் தள்ள முடியும்?

இந்த நிலையில், "அவசரப்பட வேண்டாம்!" என்று தொழிலாளிகளுக்கு உபதேசம் செய்யும் தேசபக்தர்களின் உண்மையான நோக்கம், அவர்கள் வாழ வேண்டும் என்பதா, சாக வேண்டும் என்பதா ?



---

அன்றைய வாழ்க்கைச் சூழலை அப்படியே படம் பிடித்துக் காட்டியுள்ளார் ஆடம்பரங்களும் வசதி வாய்ப்புகளும் கூடியுள்ள இன்றைய நிலையிலும் கீழ்த் தட்டு மக்கள் நிலை மாறாமலேயே - வறுமைக்கோடு என்பதற்குக் கீழேயே பலகோடி மக்கள் பாரதப் புண்ணிய பூமியில் வாழ்வதையும் பார்த்துக் கொண்டிருக்கிறோம்



# 5

# வரவுக்கேற்ற செலவு !

"**தொ**ழிலாளிகள் வரவுக்கேற்ற செலவு செய்ய வேண்டும்; அவர்கள் தங்களுக்குக் கிடைக்கும் வருவாய்க்கு ஏற்றவாறு தங்கள் வாழ்க்கைச் செலவு களைக் கட்டுப் படுத்திக் கொள்ள வேண்டும்"

*என்று இன்று, இடைக்கால தேசீய சர்க்காரில் பிரதம மந்திரி பதவி வகிக்கும் பண்டித ஜவஹர்லால் நேரு சமீபத்தில் கூறினார்*

*இந்த உபதேசம் இந்தியர்களுக்குப் புதியதல்ல பாரத நாட்டுப் பழமொழிகள், பழங்கதைகள் ஆகியவைகள் ஆயிரமாயிரம் ஆண்டுகளாக மேற்கூறிய உபதேசத்தை இந்நாட்டு மக்களுக்குச் செய்து வருகின்றன*

*இன்று எல்லா வகையிலும் இந்நாடு பிற்போக்கு அடைந்திருப்பதற்கு மேற்கூறிய உபதேசமும் ஒரு விதத்தில் காரணமாகும்*

ஆசையை அடக்கும் விஷயத்தில் எந்த நாட்டு மக்களும் இந்த நாட்டு மக்களுடன் போட்டி போட முடியாது.

பெரும்பாலான இந்தியத் தொழிலாளிகள் தாங்கள் வசதியுடன் வாழ்வதற்குத் தனி வீடு வேண்டு மென்று கனவிலும் கருதுவதில்லை.

விருந்தினர்கள் வந்தால் தங்குவதற்கும், வீட்டில் உள்ளவர்கள் உண்பதற்கும், குழந்தைகள் படிப்பதற்கும், இரவில் படுப்பதற்கும் தனித் தனி அறைகளுடன் வாழும் ஒரே ஒரு தொழிலாளியையாவது நம் நாட்டில் காண முடியாது.

எந்த இந்தியத் தொழிலாளியின் வீட்டுத் தரையிலும் ரத்தினக் கம்பளங்கள் விரிக்கப் பட்டிருப்பதில்லை.

கண்ணாடி ஜன்னல்களோ, அவற்றை வர்ண விசித்திரமான திரைகளோ அலங்கரிப்பதில்லை.

கண்ணைப் பறிக்கும் மின்சார விளக்குகளோ, வாரிவிட்ட தலையைக் கலைக்கும் மின்சார விசிறிகளோ வேண்டுமென்று எந்த இந்தியத் தொழிலாளியும் கேட்பதில்லை.

பொழுது போக்குவதற்கு ரேடியோ இல்லையே, நினைத்த இடத்துக்குப் போவதற்குக் கார் இல்லையே என்று எந்த இந்தியத் தொழிலாளியும் ஏங்குவது கிடையாது.

கட்டில், பீரோக்கள் - வெள்ளிப் பாத்திரங்கள் - மேஜை நாற்காலிகள் இவற்றைப் பற்றி எந்தத் தொழிலாளியும் மனதால்கூட நினைப்பதில்லை.

இந்த நாட்டுத் தொழிலாளிகளின் கவலை யெல்லாம், "இரண்டு வேளை வயிறாரச் சாப்பிடுவதற்கு வழி என்ன?" என்பதே!

இன்னும் சொல்லப் போனால் ஆடையைப் பற்றிக்கூட அவர்களில் பெரும்பாலோருக்கு அவ்வளவாக அக்கறை கிடையாது!

இந்த அழகான வாழ்க்கைக்கு வேண்டிய வருவாயாவது வேண்டுமென்றுதான் அவர்கள் இன்று கேட்கிறார்கள்.

"அதுகூடக் கொடுக்க மாட்டோம்!" என்றுதான் இந்த நாட்டு ஈவிரக்கமற்ற முதலாளிகள் பிடிவாதம் பிடிக்கிறார்கள்!



# 6

# பொதுஜனத் தலைவர்கள்

துரதிர்ஷ்ட வசமாக இந்த நாட்டில் இன்று பிரபலமடைந்திருக்கும் பொதுஜனத் தலைவர்களில் பெரும்பாலோர், ஏழைத் தொழிலாளிகளின் உண்மையான வாழ்க்கை நிலையை அறியாதவர்கள்; அறிய முடியாதவர்கள் !

ஏனெனில், மேற்கூறிய தலைவர்களின் வாழ்க்கைக்கும் தொழிலாளிகளின் வாழ்க்கைக்கும் மலைக்கும் மடுவுக்குமுள்ள வித்தியாசம் இருக்கிறது.

பசித்தவனுடைய வேதனையைப் பசித்தவன்தான் அறியமுடியும்; பசியாதவன் அறிய முடியாது.

அதே மாதிரி பசியாதவனுடைய சுகத்தைப் பசியாதவன்தான் உணர முடியும்; பசித்தவன் உணர முடியாது.

சில சமயம் மேற்கூறிய தலைவர்கள் ஏழைத் தொழிலாளிகளின் கஷ்ட நஷ்டங்களைப் பற்றிப் பேசுகிறார்களே என்றால்,

அவைகளெல்லாம் பிறர் எழுதிய வற்றைப் படித்து அறிந்தவை ; பிறர் சொல்லு பவற்றைக் கேட்டு அறிந்தவை ; இதயத்தோடு இதயம் ஒன்றிப் பழகி அறிந்தவையல்ல !

*அப்படியானால், அந்தத் தலைவர்களுக்கு அவ்வளவு செல்வாக்கு எப்படி ஏற்பட்டது ?*

*அதற்குக் காரணம், இந்த நாட்டில் ஆயிரமாயிரம் ஆண்டுகளாக வழங்கிவரும் "வரவுக்கேற்ற செலவு செய்ய வேண்டும்" என்பதைப் பற்றிய கட்டுக் கதைகள்தான் !*

*சுயநல வாதிகளின் மேற் கூறிய உபதேசத்துக்குச் செவி சாய்த்ததன் பயனாக இந்நாட்டு மக்கள் தங்கள் ஆசையைக் கட்டுப் படுத்தினார்கள்; அத்துடன் தங்கள் அறிவையும் கட்டுப்படுத்திக் கொண்டார்கள் நாளடைவில் பகுத்தறிவையே இழந்து படுகுழியில் தள்ளப்பட்டார்கள் !*

*யாராயிருக்கட்டுமே, அவர் பொதுஜன சேவை என்ற போர்வையைப் போர்த்திக்கொண்டு வந்து விட்டால் போதும் - அவர் சொன்னதை நம்பினார்கள்; செய்வதைப் போற்றினார்கள்!*

*உண்ணும் உணவுக்கும், உடுக்கும் உடைக்கும் சிந்தனை செய்வதைத் தவிர, இந்நாட்டு மக்கள் வேறு எதற்குமே சிந்தனை செய்வதில்லை*

ஊரைப் பற்றியோ உலகத்தைப் பற்றியோ தெரிந்து கொள்வதில்லை; பகுத்தறிவாளர்களின் புத்தகங்களையோ பத்திரிகைகளையோ படிப்பதில்லை

இன்னும் சொல்லப்போனால் அண்டை வீட்டுக் காரனைக்கூட இவர்கள் கவனிப்பதில்லை.

தான் உண்டு, தன் வீடு உண்டு; தன் மனைவி மக்கள் உண்டு! - அவ்வளவுதான்!

இத்தகைய மனோ நிலையில் வாழ்ந்து வருவதால் தான் இந்நாட்டு மக்களுக்குச் சிலர் பெருமையுடன் செல்லிக்கொள்வதுபோல் 'குலவித்தை' கல்லாமலே வந்து விடுகிறது !

ரயில்வே தொழிலாளியின் மகன் ரயில்வே தொழிலாளியாகவே வருகிறான்;

பஞ்சாலைத் தொழிலாளியின் மகன் பஞ்சாலைத் தொழிலாளியாகவே வருகிறான்;

பஸ் டிரைவரின் மகன் பஸ் டிரைவராகவே வருகிறான்;

பாக்டரி தொழிலாளியின் மகன் பாக்டரி தொழிலாளியாகவே வருகிறான்!

பெரும்பாலும் நம் சமூகத்தில் இப்படித்தான் நடக்கிறது; இன்னும் நடந்து வருகிறது.

"வரவுக் கேற்ற செலவு செய்ய வேண்டும்" என்ற நிலை மாறி, "செலவுக் கேற்ற வருவாய்க்கு வழி செய்து கொள்ள வேண்டும்" என்ற நிலை வராததால், தன் குழந்தைக்குப் போதுமான கல்வி யறிவு புகட்ட வேண்டும்;

வாழ்க்கையில் தான் முன்னுக்கு வராவிட்டாலும் தன் குழந்தையாவது முன்னுக்கு வரவேண்டும் - என்பதைத் தொழிலாளி அடியோடு மறந்துவிடுகிறான்!

அன்னிய ஆதிக்கத்துக்கு அடிமைப்பட்டிருக்கும் இந்த நாட்டில், தொழிலாளிகளின் குழந்தைகள் சர்க்கார் செலவில் போதுமான கல்வி கற்பதற்கும் வசதியில்லை.

இந்த நிலையில் வாழ்ந்துவரும் மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் தலைவர்கள், எப்படி உண்மை யான ஜனநாயக வாதிகளாய் இருக்கமுடியும்?



இன்றைய ஆங்கில மோகக் கல்வி புதிய விளைவு.

# 7

# அவசரம் எது?

தொழிலாளியின் சம்பள உயர்வுப் பிரச்சினை ஜீவாதாரமான பிரச்சினை என்பதை யாரும் மறு முடியாது.

அந்தப் பிரச்சினைக்கு இப்போது அவசரம் இல்லை யென்றால் பின் எதற்குத்தான் அவசரம்?

விவாகச் சீர்திருத்தம், வரதட்சணைக் கட்டுப்பாடு, ஆண்கள் மறுமணம் செய்துகொள்வதற்குத் தடை, பெண்களுக்குச் சொத்துரிமை போன்ற சமூகச் சீர்திருத்தச் சட்டங்களுக்கா?

வெட்கக்கேடு?

கேலிக்கு இடமான இந்த நிலைக்குக் காங்கிரஸ் மகா சபை இன்று நேற்று வந்துவிடவில்லை.

என்றைக்கு "விடுதலை, அல்லது வீர மரணம்!" என்ற கோஷத்தைக் கைவிட்டுவிட்டு, "கிடைத்த வரையில் அதிகாரத்தைக் கைப்பற்றுவது!" என்று தீர்மானித்ததோ, அன்றைக்கே வந்துவிட்டது.

"சுதந்திரத்துக்காகச் சிறைவாசம் " என்பது போய், "பதவிக்காகச் சிறைவாசம் !" என்று ஆகிவிட்டது

இதைச் சிலர் மறுக்கலாம்.

மறுத்தாலும் உண்மை பொய்யாகி விடாது; மறுக்காவிட்டாலும் பொய் உண்மையாகி விடாது

சந்தர்ப்பத்தை எதிர் நோக்கிக் காத்துக் கொண்டிருந்த பொதுஜன விரோதிகள் பலர், தங்கள் சுயநலத்தைக் காந்திக் குல்லாய் போட்டு மறைத்துக் கொண்டு, காங்கிரஸுக்குள் நுழைந்து விட்டனர்.

எப்படியாவது பதவிகளைக் கைப்பற்றித் தங்களுடைய சுயநல உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்வதற்குத் தயாராகி விட்டனர்.

இதனால் நாளடைவில் டாடா, பிர்லா போன்ற பெரிய பெரிய முதலாளிகள் விரித்த வலையில் காங்கிரஸ் மகாசபை வீழ்ந்தது

காங்கிரஸ் காரியக் கமிட்டி கூடும்போதெல்லாம் மேற்கூறிய முதலாளிகள் அதன் அங்கத்தினர்களுக்கு உண்டி, உபச்சாரம் செய்ய ஆரம்பித்தனர்.

இதனாலெல்லாம் நாளுக்கு நாள் காங்கிரஸில் அவர்களுடைய செல்வாக்கு மிகுந்தது

ஆகவே, அவர்களைப் பகைத்துக் கொள்ளாமல் தொழிலாளிகளுக்கு நன்மை எதுவும் செய்ய முடியாத நிலைமையைக் காங்கிரஸ் அடைந்தது.

பத்து வருஷங்களுக்கு முன்னால் பெரும்பாலான மாகாணங்களில் காங்கிரஸ் பதவி ஏற்றபோதுகூட இதே நிலைமையில்தான் இருந்தது

இன்றும் அந்த நிலைமையில் மாறுதல் ஏதும் ஏற்பட்டு விடவில்லை.

இடைக்காலத் தேசிய சர்க்கார் ஏற்பட்டு நான்கு மாதங்களாகிவிட்டன. மாகாணங்களில் காங்கிரஸ் மந்திரிகள் பதவி ஏற்றுப் பத்து மாதங்களாகிவிட்டன பொதுஜன ஆதரவைப் பெற்ற இந்த மந்திரி சபைகள், இன்றுவரை ஏழை மக்களுக்காக என்ன செய்து இருக்கின்றன?

ஏதும் அறியாத பாமரர்களான ஹிந்துக்களும், முஸ்லிம்களும் தங்களுக்கு ஏதோ வந்துவிட்டது என்றும் வரவில்லை என்றும் நினைத்துக் கொண்டு ஒருவரை யொருவர் கொன்று குவித்துக் கொள்கிறார்கள்!

இதைத் தவிர, யுத்த காலத்தில் திடீர்ப் பணக்காரர் களானவர்களின் சொத்தில் பாதியாவது பறிமுதல் செய்து, அதைப் பொதுஜன நன்மைக்காகப் பயன்படுத்துவதற்கு ஒரு சட்டத்தையும் காணோம்.

நாட்டின் உற்பத்திச் சக்தியை அதிகப்படுத்துவதற்கும், மக்களின் வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்களை வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்வதற்கும், இவைகளின் மூலம் கள்ள மார்க்கெட்டையும் லஞ்சப் பேயையும் ஒழிப்பதற்கும் ஒரு சட்டத்தையும் காணோம்

அதிகார வர்க்கமாவது, "ஆயிரம் ரூபாய் நோட்டு செல்லாது!" என்று ஓர் அதிர் வேட்டுச் சட்டத்தைப் போட்டு ரகளை செய்தது;

அதிகார வர்க்கமில்லாத சர்க்காரோ அதுகூடச் செய்யவில்லை!

தேர்தலுக்கு முன்னால் நம் மதிப்புக்குரிய தலைவரான ஜவஹர்லால் நேரு, "கள்ள மார்க்கெட்காரர் களைத் தூக்கில் போடுவோம்!" என்று கர்ஜித்தார்.

தேர்தலுக்குப் பின்னால் அந்தக் கள்ள மார்க்கெட் காரர்களைப் பற்றி அவர் இன்று வரை கவலைப்படுவ தோடு நின்றிருக்கிறார்.

உணவு நிலைமையைச் சமாளிப்பதற்காகத் தப்பித் தவறிக் கொண்டு வந்த கொள்முதல் திட்டங்களும் இல்லாதவனை வாழ வைக்கவில்லை; இருப்பவனைத்தான் வாழவைக்கின்றன!

அதாவது, ''உங்களுக்கு உணவு வேண்டுமானால் கள்ள மார்க்கெட்காரர்களையே நம்புங்கள்; கேட்கிற

*விலையைக் கொடுத்து அவர்களைத் திருப்தி செய்யுங்கள்!" என்று அவை நமக்கு உபதேசிக்கின்றன!*

*இந்தப் படு மோசமான சூழ்நிலையில் உயிர் வாழ்வதற்குத் தொழிலாளிகள் தங்களுடைய மாதச் சம்பளத்தையாவது ஓரளவு உயர்த்திக் கொள்ளப் பார்ப்பது நியாயம்.*

*அந்த நியாயத்துக்காகச் சிலர் சொல்வது போல் அவர்கள் அவசரப் படவில்லை.*

*1936-ஆம் வருஷம் மாகாணங்களில் காங்கிரஸ் ஆட்சி ஏற்பட்டதிலிருந்தே அவர்கள் தங்கள் கோரிக்கையை வற்புறுத்தி வந்திருக்கிறார்கள்; மகாத்மா காந்தியைக் கூடத் தோற்கடிக்கக் கூடிய பொறுமையுடன் இருந்திருக்கிறார்கள்.*

*அதாவது, யுத்தத்துக்கு முன்னால் !*

*அந்தக் கோரிக்கைக்கு அப்போதிருந்த அவசரத்தை விட, இப்போது அவசரம் அதிகரித்து இருக்கிறது என்பதை மனித இதயம் படைத்த எவனும் மறுக்க முடியாது.*

*அப்படியிருந்தும், "அவர்கள் அவசரப் படுகிறார்கள்!" என்று சொல்வதைப் போன்ற அறிவீனம் வேறு ஏதாவது இருக்க முடியுமா?*



# 8
# அடக்குமுறைத் தாண்டவம்

ஒரு காலத்தில் இந்த அடிமை நாட்டு மக்களின் உள்ளத்திலே சுதந்திர ஆர்வத்தைத் தூண்டி விடுவதற்கு அரும்பாடு பட்டது காங்கிரஸ்.

அவரவர்கள் உரிமையைப் பாதுகாத்துக் கொள்வதற்காகச் சட்டத்தை மீறுவதற்கும் தைரியமளித்தவர் காந்திஜி.

இதன் பயனாகத் தேச மக்கள் திரண்டெழுந்தனர்; உரிமைப் போர் மூண்டது.

அதிகார வர்க்கம், "அமைதியை நிலை நாட்டுகிறோம்!" என்று சொல்லிக் கொண்டு, தன் மிருகத்தனமான அடக்கு முறைகளைப் பிரயோகித்தது.

எத்தனையோ அவசரச் சட்டங்கள் ஒன்றன் பின் ஒன்றாகப் பிறந்துகொண்டே யிருந்தன.

அப்பொழுதெல்லாம் இந்த அடக்குமுறைகளைக் கண்டித்துக் காரசாரமாகப் பேசாதவர் யாரும்

*காங்கிரஸில் கிடையாது; அவற்றைத் தாக்கி எழுதாத தேசியப் பத்திரிக்கைகளும் இல்லை.*

*இப்பொழுதோ? - எல்லாம் தலைகீழாக மாறி விட்டது.*

அன்று அதிகார வர்க்கம் கையாண்ட அதே அடக்கு முறைகளை, இன்று அதிகாரத்தைக் கைப்பற்றியிருக்கும் காங்கிரஸ் காரர்களும் கையாளுகின்றனர்.

*அன்று, "அமைதியை நிலை நாட்டுகிறோம்!" என்று அவர்கள் சொன்ன அதே கதையை இன்று இவர்களும் சொல்லுகின்றனர்*

*உரிமைப் போருக்கு முதன் முதலில் விதை விதைத்த காங்கிரஸ் மகாசபை, இப்பொழுது தொழிலாளிகளின் உரிமை பறி போகும்போது ஒன்றும் சொல்ல வில்லை.*

*உரிமையைப் பாதுகாத்துக் கொள்வதற்காகச் சட்டத்தை மீறுவதற்குத் தைரியமளித்த காந்திஜியும், தொழிலாளிகள் தாங்கவொண்ணாத அடக்கு முறை களுக்கு ஆளாகும் இந்தச் சந்தர்ப்பத்திலே ஒன்றும் சொல்லக் காணோம்.!*

*அடக்கு முறைகளைக் கண்டித்துக் காரசாரமாகப் பேசும் காங்கிரஸ்காரர்களும் இப்பொழுது கிடையாது;*

*அவற்றைத் தாக்கி எழுதும் தேசீயப் பத்திரிகைகளும் இல்லை!*

*அதிலும், சம்பள விஷயத்தில் மற்ற மாகாணக் காங்கிரஸ் மந்திரிகளைத் தோற்கடித்துவிட்ட சென்னை மாகாணக் காங்கிரஸ் மந்திரிகள், தொழிலாளிகளின் உரிமைப் போராட்டங்களை, அடக்கு முறைகளைக் கொண்டு நசுக்கும் விஷயத்திலும் மற்ற மாகாணங் களைத் தூக்கியடித்து விட்டனர். !*

*முன்போல் அவர்கள் தொழிலாளர் கூட்டங்களில் கலந்து கொண்டு காரசாரமான பிரசங்கங்கள் செய்வ தில்லை*

*தொழில் மந்திரியான கனம் வி.வி. கிரி மந்திரியா வதற்கு முன்னால் ஓரிரண்டு தொழிலாளர் சங்கங்களில் தாம் வகித்து வந்த தலைமைப் பதவியையும் மந்திரி யானவுடன் ராஜினாமாச் செய்துவிட்டார்.!*

*ராஜாஜிக்குப் பதிலாகத் தாம் பிரதம மந்திரியாக வந்துவிட வேண்டுமென்று காந்திஜியின் ஆணையைக் கூட மீறிய பிரதம மந்திரி பிரகாசம், வாழ்க்கை முறையில் ஒருபோதும் நிரந்தர வெற்றியடைய முடியாத மகாத்மாவின் கதர்த் திட்டத்தைச் சட்டத்தின் மூலம் மக்களிடையே திணிக்கும் விஷயத்தில் கண்ணுங் கருத்துமாயிருந்து வருகிறார்.*

*அதிலும், பொது ஜனங்களின் பரிபூரண எதிர்ப்புக்குப் பாத்திரமாகி யிருக்கும் பஞ்சாலைத் தடை*

விஷயத்தில் அவர் பிடிக்கும் பிடிவாதம் பிரசித்தி பெற்றது.

காந்திஜியின் தனிப்பெரும் வோட்டைக் கொண்டு பிரதம மந்திரியானவர்கூட அவ்வளவு பிடிவாதம் பிடிக்க மாட்டார் போலிருக்கிறது !

"அடக்கு முறைச் சட்டங்களையெல்லாம் உடைத் தெறிய வேண்டும்!" என்ற காங்கிரஸ் கொள்கைக்கு நேர் விரோதமாகச் செத்துப்போன அவசரச் சட்டங்களுக் கெல்லாம் புத்துயிர் கொடுத்து வருகிறார், சென்னைப் பிரதமர் பிரகாசம்.

இந்தப் புது வருடத்தில் போலீஸிற்குக் கவர்னர் சர்க்கார் செலவிட்டதை விடக், காங்கிரஸ் சர்க்கார் ஒரு கோடி ரூபாய் அதிகமாகச் செலவிடப் போகிறார்களாம்.

எதற்கு?

உணவுப் பஞ்சத்தைத் தீர்ப்பதற்கல்ல;<br>
உடைப் பஞ்சத்தை ஒழிப்பதற்கல்ல;<br>
கள்ள மார்க்கெட்டைத் தொலைப்பதற்கல்ல;<br>
லஞ்சப் பேயை விரட்டுவதற்கல்ல;

தொழிலாளிகளின் இரத்தத்தை உறிஞ்சுவதற் காகத்தான்!

# 9

# அமைதிக்குப் பங்கம் யாரால்?

தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்வதென்பது சிலர் நினைப்பது போல் அவ்வளவு சர்வ சாதாரணமான விஷயமல்ல.

வேலை நிறுத்தத்தால் தொழிலாளிகளுக்கு ஏற்படும் கஷ்ட நஷ்டங்கள் தாங்க முடியாதவை.

மாதக் கணக்கில் அவர்கள் தங்கள் மனைவி மக்களோடு பட்டினி கிடக்க வேண்டும்.

கடைசி வரையில் சோர்வடையாது முதலாளிகளுடன் உறுதியோடு போராட வேண்டும்.

அதே சமயத்தில் பின்னால் முதலாளிகள் தங்களைப் பழி வாங்கப் போவதையும் எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டும்.

இந்த நிலையில், 'நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகச் சாவதைவிட,

ஒரேயடியாய்ச் செத்துப் போவதே மேல்' என்று துணியும்போதுதான், அவர்கள் வேலை நிறுத்தத்தை ஆரம்பிக்கிறார்களே தவிர, அதை ஓர் அற்ப விளையாட்டுக் கருவியாக எண்ணி எப்பொழுதுமே உபயோகிப்பதில்லை.

இத்தனைக் கஷ்டங்களுடன், தாங்களும் மனிதர்கள் என்பதை அறவே மறந்து விட்டிருக்கும் போலீஸாரின் கொடுமைகளுக்கும் தொழிலாளிகள் ஆளாக வேண்டுமா?

அமைதியைப் பாதுகாப்பதற்குப் போலீஸாரின் உதவியை நாடுவதைத் தவிர, 'ராமராஜ்ய' ஸ்தாபகர் களுக்கு வேறு வழி ஒன்றுமே யில்லையா ?

உதாரணமாகச் சமீபத்தில் நடைபெற்ற ரயில்வே வேலை நிறுத்தத்தைப் பார்ப்போம்.

சென்ற ஜூன் மாதம் 27உ நாடெங்குமுள்ள ரயில்வே தொழிலாளிகள், தங்களுக்குக் குறைந்த பட்சம் முப்பத்தைந்து ரூபாயாவது மாதச் சம்பளம் வேண்டு மென்று கோரி, வேலை நிறுத்தம் செய்யப் போவதாக அறிவித்தனர்.

ஒரு பிரயாணி உட்காரக் கூடிய இடத்தில் நாலு பிரயாணிகள் நின்று பிரயாணம் செய்ததன் பயனாகத் தொண்ணூறு கோடி ரூபாய் லாபம் சம்பாதித்திருந்த ரயில்வே போர்டார்,

நல்ல வேளையாக அவர்களுடைய கோரிக்கை களை ஓரளவாவது நிறை வேற்றி வைப்பதாகக் கூறி வேலை நிறுத்தத்தைக் கைவிடும்படிச் செய்தார்கள்.

இந்தச் சமயத்தில் தென்னிந்திய ரயில்வே அதிகாரிகள் எரிகிற தீயில் எண்ணெய் விடுவது போன்ற காரியங்களைச் செய்தார்கள்.

அதாவது, கொந்தளித்துக் கொண்டிருக்கும் தொழிலாளர்களிடையே குழப்பம் உண்டாக்கும் படியாக அங்கே நாலு பேரை 'ஸஸ்பெண்ட் செய்வது, இங்கே இரண்டு பேரை 'டிஸ்மிஸ்' செய்வது - இவ்வாறு ஏதாவது பண்ணி வைத்தார்கள்!

சகோதரத் தொழிலாளிகளும், தொழிலாளர் தலைவர்களும் இந்த அக்கிரமத்தைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க முடியுமா?

அவர்கள் இந்தத் தகராறைத் தீர்த்துவைக்க முதலாளிகளுடன் சமரசம் பேச முயன்றனர். ஆனால் அவர்களுடைய முயற்சி முதலாளிகளால் முறியடிக்கப் பட்டு விட்டது.

ஆகவே, வேறு வழியின்றித் தென்னிந்திய ரயில்வே தொழிலாளர் சங்கத்தின் மத்திய நிர்வாகக் கமிட்டி ஜூலை மாதம் 31உ கூடி, ஆகஸ்ட் 24உ வேலை நிறுத்தம் செய்வதென்று தீர்மானித்தது.

இதன் நோக்கம், இடையேயிருக்கும் இருபத்து மூன்று நாள் அவகாசத்தில் ரயில்வே அதிகாரிகளும் தொழிற்சங்கப் பிரதிநிதிகளும் கூடிப் பேசி ஏதாவது சமரசம் செய்து வைக்கட்டும் என்பதுதான்.

சர்க்காரின் நோக்கம் உண்மையிலேயே அமைதியை நிலைநாட்டுவதாயிருந்தால், தொழிலாளி களும் அவர்களுடைய தலைவர்களும் எதிர்பார்த்தபடி, மேற்கூறிய இருபத்து மூன்று நாள் அவகாசத்தில் கட்டாயம் சமரசம் செய்து வைத்திருக்கலாம்.

ஆனால், இடைக்காலத் தேசீய சர்க்காரும் அதை விரும்பவில்லை; சென்னை மாகாணப் பிரகாசம் சர்க்காரும் அதை விரும்பவில்லை

வேலை நிறுத்தம் ஆரம்பமாயிற்று.

தென்னிந்திய ரயில்வே ஏஜென்டான ரெய்னால்ட்ஸ் போர்க்கோலம் பூண்டார்.

அவருடைய பச்சைப் பொய்களையெல்லாம் தேசீயப் பத்திரிக்கைகள் என்று சொல்லிக்கொள்பவை பத்தி பத்தியாகப் பிரசுரித்துப் பெருமையடைந்தன.

அதே சமயத்தில் தொழிலாளர் சங்கத் தலைவர் களின் அறிக்கைகளையெல்லாம் குப்பைக் கூடையில் போட்டுத் திருப்தியடைந்தன.

*வெள்ளைக்காரர்களை இந்தியாவை விட்டு வெளியேற்றுவதற்காகப் பதவியேற்ற காங்கிரஸ் சர்க்கார்களில் ஒன்றான பிரகாசம் சர்க்காரும் ரெய்னால்ட்டுடன் சேர்ந்தது*

*எங்கும் - அதிகார வர்க்கம்கூட வெட்கித் தலை குனியும்படியான அடக்குமுறைத் தாண்டவம். !*

*ஸெக்ஷன் 144, "கூடாதே!", "பேசாதே!" என்று தொழிலாளிகளைப் பயமுறுத்திற்று.*

*நிராயுதபாணிகளான தொழிலாளர் பலர் துப்பாக்கிக் குண்டுக்கு இரையாயினர்; "வயிற்றுக்கு இல்லை!" என்ற குற்றத்துக்காக இரத்தம் சிந்தினர்.*

*யதேச்சாதிகார சர்க்காராவது இம்மாதிரி அக்கிரமங்களைச் செய்துவிட்டால், பெயருக்காவது 'விசாரணை' என்று ஒன்றை நடத்திப் பொது ஜனங்களின் கண்ணீரைத் துடைக்கும் ஜனநாயக சர்க்காரோ அதுகூடச் செய்யவில்லை.*

*ஏனெனில் அவர்கள்தான் ஜனநாயக சர்க்காராச்சே!*

*தங்களைப் பற்றித் தாங்களே ஏன் விசாரணை நடத்திக் கொள்ள வேண்டும் என்று நினைத்தார்களோ, என்னமோ!*

*அவர்கள் எப்படி நினைத்தாலும் ஒன்று மட்டும் உண்மை.*

இன்று உலக நாடுகள் பலவற்றில் 'ஜனநாயகம்' என்ற பெயரால் பணக்காரர் களின் ஆட்சி நடைபெறுவதை நாம் பார்க்கிறோம்.

*அதேமாதிரியான பணக்காரர்களின் ஆட்சியைத் தான் இன்று இந்தியாவிலும் 'ஜனநாயகம்' என்ற பெயரால் நாம் பார்க்கிறோம்.*



# 10

# கட்சிச் சண்டை

முதலாளிகளுக்கும் தொழிலாளிகளுக்கும் இடையே அவ்வப்போது ஏற்படும் தகராறுகளைச் சமரசமான முறையில் தீர்த்து வைப்பது சாத்தியமில்லாத காரியமல்ல

அதிலும் பொதுஜன சர்க்காரால் மேற்கூறிய தகராறுகளைத் தீர்த்து வைக்க முடியவில்லையென்றால் வேறு யாராலும் தீர்த்து வைக்க முடியாது.

பதவிக்கு வந்ததும் தங்களைத் தேர்ந்தெடுத்த மக்களை மந்திரிமார்கள் மறந்து விடுவது மன்னிக்க முடியாத குற்றமாகும்.

அதிகாரத்துக்கு வருவதற்கு முன்னால் அவர்கள் பொது ஜனங்களுடன் நெருங்கிய தொடர்பு வைத்துக் கொண்டிருக்கிறார்கள்; அதிகாரத்துக்கு வந்ததும் ஏனோ அந்தத் தொடர்பிலிருந்து கூடியவரை விலகிக் கொள்ளப் பார்க்கிறார்கள் !

இத்தனைக்கும் மந்திரிப் பதவிகள் அவர்களுக்குச் சாசுவதமானவை யல்ல.

இதை நாம் சொல்லவில்லை; அவர்களே சொல்கிறார்கள். யார் சொன்னாலும் இது உண்மைதான்.

நாளைக்கே அரசியல் உலகத்தில் ஏதாவது நெருக்கடி ஏற்பட்டால், அவர்கள் வெளியே வந்துவிட வேண்டியவர்கள்; மீண்டும் பொதுஜன ஆதரவைத் தேடக் கூடியவர்கள்.

இந்த நிலையில், பொதுஜனங்களை அவர்கள் அலட்சியம் செய்வது ஆபத்தானது; காங்கிரஸின் செல்வாக்கையே பாதிக்கக் கூடியது.

இந்த விபத்திலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக அவர்கள் பயங்கரமான அடக்குமுறைகளைக் கையாளும் போதெல்லாம் பழியைப் பொதுஜனங்கள் மீது போடுகிறார்கள்

பொதுஜனங்கள் வேறு, தொழிலாளிகள் வேறு என்று விஷயம் தெரியாமல் பிரித்துப் பேசுகிறார்கள்

இதைப் போன்ற அபத்தம் வேறு இருக்க முடியாது. ஏனெனில், ஒருபோதும் தொழிலாளிகளும்

பொதுஜனங்களும் வெவ்வேறு இனத்தைச் சேர்ந்தவர் களாக இருக்க முடியாது

தொழிலாளிகள்தான் பொதுஜனங்கள்;

பொது ஜனங்கள்தான் தொழிலாளிகள்

பொதுமக்களின் சுக துக்கங்கள், வெற்றி தோல்விகள் ஆகியவற்றில் பாடுபடும் மக்களுக்கும் பங்கு உண்டு; அதே மாதிரி பாடுபடும் மக்களின் சுக துக்கங்கள், வெற்றி தோல்விகள் ஆகியவற்றில் பொது மக்களுக்கும் பங்கு உண்டு.

ஆகவே, பழியைப் பொதுஜனங்களின் மீது சுமத்துவதன் மூலம், சர்க்கார் தொழிலாளருக்கு இழைக்கும் கொடுமைகளிலிருந்து தப்ப முடியாது.

என்னதான் அபத்தப் பிரச்சாரம் செய்தாலும், மேற்கூறிய பயங்கரமான அடக்குமுறைகளுக்கெல்லாம் உண்மையான காரணம் என்ன வென்பது பொது ஜனங்களில் சிலருக்காவது தெரியும்.

அதிலும், அந்த விஷயத்தில் சென்னை மாகாணப் பொது மக்களில் பெரும்பாலோரை ஒருநாளும் ஏமாற்ற முடியாது.

பிரகாசம் சர்க்கார் கம்யூனிஸ்டுகளைப் பழி வாங்குவதற்குப் பதிலாக, வயிற்றுக் கொடுமையைக்

தவிர வேறு எதையும் அறியாத தொழிலாளரைப் பழி வாங்குகிறார்கள் என்பதை அவர்கள் நன்கு அறிவார்கள்

இதற்கு ஒரே ஒரு உதாரணம் போதும். சென்ற ஜூன் மாதம் பக்கிங்காம் - கர்நாடிக் ஆலைத் தொழிலாளருக்கும் ஆங்கில முதலாளிகளுக்கும் இடையே ஒரு சின்னஞ் சிறு தகராறு எழுந்தது.

அதாவது, ஆலையின் வாயிலில் காவலுக்காகப் பஞ்சாப்காரர்களை ஆலை முதலாளிகள் நியமித்து இருந்தார்கள்.

தமிழ்ப் பாஷை தெரியாத காரணத்தினால் அவர்களுக்கும் தொழிலாளிகளுக்கு மிடையே அடிக்கடி தகராறு ஏற்பட்டு வந்தது.

ஒரு நாள் பஞ்சாபி காவற்காரர்கள் தங்கள் கையில் வைத்திருந்த இரும்புத் தடிகளால் தொழிலாளர்களில் சிலரை அடித்துவிட்டார்கள்

இதன் காரணமாகப் பஞ்சாபி காவலாளிகளை மாற்ற வேண்டுமென்று எல்லாத் தொழிலாளிகளும் கோரினார்கள்.

முதலாளிகள் அவர்களுடைய கோரிக்கையை நிறை வேற்றாமற் போகவே, வேறு வழியின்றித் தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்தார்கள்.

*ஒன்றிரண்டு பேர் அல்ல; பதினாலாயிரம் பேர் வேலை நிறுத்தம் செய்த விஷயம் இது; இந்தத் துணிப்பஞ்ச காலத்தில் தினசரி இரண்டரை லட்சம் கெஜம் துணி உற்பத்தியை நஷ்டமாக்கிய விஷயம் இது !*

*இந்த விஷயத்தை "அற்ப விஷயம்" என்று சொல்லிவிட்டு, முதலாளிகளுக்குத் துணையாகப் போலீஸாரை அனுப்பிவிட்டு, பதினெட்டு நாட்கள் சும்மாயிருந்தார்கள், காங்கிரஸ் மந்திரிமார்கள் !*

*வேண்டுமானால், வேலை நிறுத்தம் ஆரம்பித்த மறுநாளே மந்திரிமார்கள் ஆலை முதலாளியைக் கூப்பிட்டு மேற்கூறிய அற்பக் காரணத்தை நிவர்த்தி செய்து, பதினாலாயிரம் தொழிலாளிகளைத் திருப்தியுடன் வேலைக்குத் திரும்பச் செய்திருக்கலாம். அவர்கள் அவ்வாறு செய்யவில்லை.*

*"பதினெட்டு நாட்கள் தலையிட மாட்டோம்!" என்று சொல்லிக் கொண்டிருந்துவிட்டு, பத்தொன்பதாம் நாள் வழக்கம் போல் ஒரு சமரச அதிகாரியை நியமித்தார்கள்.*

கடைசியாக நாற்பத்தைந்து நாட்கள் ஆன பிறகு, ஒரு கோடி கெஜம் துணிக்குமேல் நஷ்டமான பிறகு, பதினாலாயிரம் பேர் அரைப் பட்டினி கிடந்த பிறகு, பக்கிங்காம்- கர்நாடிக் ஆலைகள் திறந்தன. தொழிலாளிகளும் வேலைக்குத் திரும்பினார்கள்.

வேலை நிறுத்தம் முடிந்தபிறகு, தம்மைப் பேட்டி கண்ட பக்கிங்காம் - கர்நாடிக் தொழிலாளர் தலைவரிடம், பிரதம மந்திரி பிரகாசம் என்ன சொன்னாராம், தெரியுமா?

"நீங்கள் எந்தக் கட்சியையும் சேராதவர் என்று இதுவரை எனக்குத் தெரியாது; கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவராக்கும் என்று நினைத்து இத்தனை நாட்கள் சும்மாயிருந்து விட்டேன்!" என்றாராம்!

இது உண்மையானால், கட்சிச் சண்டையின் காரணமாகக் கனம் பிரகாசம் தொழிலாளிகளைப் பழி வாங்குவது அநீதியாகும்.





# 11

# மத்தியஸ்தர் மர்மம்

"அந்நிய நாட்டுப் பொருட்களைப் பகிஷ்காரம் செய்ய வேண்டும்'' என்று பிரசாரம் செய்த காங்கிரஸ் காரர்கள், பதவி ஏற்ற பின் அன்னிய நாட்டுச் சர்க்காரின் வேலைத் திட்டங்களையே பின்பற்றுவது வெட்கக் கேடான விஷயம்.

யதேச்சாதிகார சர்க்காரின் வேலைத் திட்டங்களுக்கும் ஜனநாயக சர்க்காரின் வேலைத் திட்டங்களுக்கும் வித்தியாசம் ஒன்றும் இல்லையானால், அந்த சர்க்கார் இருப்பதும் ஒன்றுதான்; இல்லாமற் போவதும் ஒன்றுதான்!

பொதுஜனத் திருப்திக்காக, ''ஆயிரம் ரூபாய் நோட்டு செல்லாது!'' என்பது போன்ற ஏதாவது ஒரு திடுக்கிடும் சட்டத்தைச் செய்துவிட்டு,

"பார்த்தீர்களா? நாங்கள் எப்பொழுதுமே உங்களுடைய நலனுக்காகத்தான் உழைக்கிறோம்!"

என்று பெருமை யடித்துக் கொள்ளும் அதிகார வர்க்கத்தைப் போல, காங்கிரஸ் சர்க்காரும் மதுவிலக்குப் போன்ற ஏதாவது ஒரு சட்டத்தைக் கொண்டு வந்துவிட்டு,

"பார்த்தீர்களா? ஏழைகளுக்காக நாங்கள் என்னவெல்லாம் செய்கிறோம்!"

என்று பெருமையடித்துக் கொள்ளுவதன் மூலம் பொதுஜனங்களை ஏமாற்றக் கூடாது!

இவ்வாறு ஏமாற்றும் முறையைச் சேர்ந்ததுதான் தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்யும் போதெல்லாம் சென்னை சர்க்கார், "இதோ, மத்தியஸ்தரை நியமிக்கிறோம்!" என்பதும்!

இதனால் எவ்வளவோ காலதாமதம் ஏற்படுகிறது. தொழிலாளிகள் பொறுமையை இழந்து விடுகிறார்கள்.

முதலாளிகள் தங்களுடைய தொழிற்சாலை, இயந்திரங்கள் முதலியவை பழுதடைந்து போகாமல் இருப்பதற்காகக் கூலிக்கு ஆள் பிடிக்கிறார்கள்.

இதனால் தங்களுடைய வேலை நிறுத்தத்துக்குப் பங்கம் நேர்ந்து விடுகிறதென்று அஞ்சித் தொழிலாளிகள் மறியல் செய்ய ஆரம்பிக்கிறார்கள். அமைதி குலைகிறது.

*முதலாளிகள் போலீசாரின் உதவியை நாடுகிறார்கள்.*

*சர்க்கார் கண்ணை மூடிக்கொண்டு அவர்களுக்கு வேண்டிய போலீஸ் உதவி அளிக்கிறது.*

*தொழிலாளிகள் ஆத்திரமடைகின்றனர். அதன் பலன் படுகொலையில் வந்து முடிகிறது!*

*இந்த அழகான "மத்தியஸ்தர் முறை" அதிகார வர்க்க ஆட்சியைச் சேர்ந்தது*

> அதிகார வர்க்கத்தார், பொது ஜனங்களுடன் எந்த விதத்திலும் தொடர்பு இல்லாதவர்கள் - வரி வசூல் செய்வதைத் தவிர!

*காங்கிரஸ் மந்திரிகள் அப்படியில்லை. பதவிக்கு வருவதற்கு முன்னால் அவர்கள் பொதுஜனங்களுடன் நெருங்கிப் பழகியவர்கள்.*

*ஆகவே, பதவிக்கு வந்த பின்பும் அவர்கள் பொது ஜனங்களுடன் நெருங்கிப் பழக வேண்டும் இல்லையென்றால் அவர்கள் பொது வாழ்விலிருந்தே விலகிக் கொள்ள வேண்டும்.*

இவ்வாறு செய்வதை விட்டுவிட்டு, தாங்கள் அடைந்திருக்கும் பொதுஜனச் செல்வாக்கை அவர்கள் தங்களுடைய சுயநலத்துக்காக உபயோகித்துக் கொள்ளப் பார்ப்பது துரோகமாகும்.

அப்படித்தான் இந்த மத்தியஸ்தர் விஷயத்தில் அதிகார வர்க்கத்தைப் பின்பற்றுகிறார்களே, அவர்களிடம் இல்லாத நேர்மையாவது இவர்களிடம் இருக்கிறதா என்றால், அதுவும் கிடையாது

கதையைக் கேளுங்கள்:

தமிழ் நாட்டில் உள்ள நிலங்களின் பெரும் பகுதி மிராசுதார்களுக்குத்தான் சொந்தம்.

நாளெல்லாம் உழுது பாடுபடும் விவசாயிகள் பெரும்பாலும் வாரதாரர்களாகவோ, குத்தகைதாரர் களாகவோதான் இருப்பார்கள்.

இவர்களுக்குக் குடி வார பாத்தியதை கிடையாது. மிராசுதார்கள் நினைத்தால் இவர்கள் அத்தனை நாளும் உழுது பண்படுத்திய நிலத்தை விட்டுவிட்டு ஓட வேண்டியதுதான்!

மிராசுதார்களிடமிருந்து நிலத்தை வாரத்துக்கு எடுத்துக் கொண்டாலும் சரி. மொத்த விளைச்சலில் நூற்றுக்கு இருபது பங்குகூட விவசாயிக்குக் கிடையாது.

திருச்சி ஜில்லாவில் பல கிராமங்களில் நூற்றுக்குப் பதினாறு பங்குதானாம்!

இந்தப் பங்குக்காக விவசாயி சாகுபடி செலவு பூராவையும் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

மிராசுதாருக்கு அந்தச் செலவைப் பற்றிக் கவலையே கிடையாது!

இந்தப் பஞ்சகாலத்தில் நூற்றுக்கு இருபது பங்கு கொடுப்பதற்குப் பதிலாக இருபத்தேழரைப் பங்காவது கொடுக்க வேண்டுமென்று சொந்த நிலம் இல்லாத விவசாயிகள் பலர் இன்று எங்கும் கிளர்ச்சி செய்கிறார்கள்.

மிராசுதார்களோ, "எங்கள் நிலம் தரிசாய்க் கிடந்தாலும் கிடக்கட்டும்; உங்களுக்கு மேற்கொண்டு ஏழரைப் பங்குமட்டும் கொடுக்க மாட்டோம்!" என்று இந்த உணவுப் பஞ்சகாலத்தில் பிடிவாதம் பிடிக்கிறார்கள் !

உடை விஷயத்தில் ஏழை விவசாயியைப் பின்பற்றி வாழ்ந்துவரும் மகாத்மாவின் ஆசீர்வாதம் பெற்ற காங்கிரஸ் சர்க்காரோ, "மிராசுதார்கள் சொல்வதுதான் சரி!" என்று சாதிக்கிறது!

*இதன் பயனாகச் சமீபத்தில் மன்னார்குடியில் மிராசுதார்களுக்கும் விவசாயிகளுக்கும் இடையே தகராறு நேர்ந்தது.*

*இந்தத் தகராறைத் தீர்த்து வைப்பதற்காகச் சென்னை சர்க்கார் வழக்கம்போல் முதலில் போலீஸாரை அனுப்பி விட்டு, அப்புறம் ஒரு மத்தியஸ்தரை நியமித்தது.*

*அந்த மத்தியஸ்தர் தீர்க்கமாக விசாரித்த பிறகு, எதிர்பாராத விதமாக விவசாயிகளுக்குச் சாதகமாகத் தீர்ப்பு செய்தார்.*

*"நாங்கள் பொதுஜனங்களின் வேலைக்காரர்கள்!" என்று சொல்லிக் கொள்ளும் காங்கிரஸ் மந்திரிகள், மேற்கூறிய மத்தியஸ்தரின் அந்தத் தீர்ப்பை நிறைவேற்றி வைக்க முடியாதென்று மறுதளித்து விட்டார்கள்!*

*இந்தத் தீர்ப்புடன் இன்னொரு தீர்ப்பையும் ஒப்பிட்டுப் பார்த்தால்தான் 'மத்தியஸ்தர் மர்மம்' என்றால் என்னவென்பது விளங்கும்.*

*தமிழ் வருஷப் பிறப்பன்று விடுமுறை அளிக்க வேண்டுமென்று ஸ்பென்ஸர் கம்பெனி தொழிலாளர் கோரினார்கள்.*

ஆங்கில வருஷப் பிறப்புக்கு விடுமுறை அளிக்கும் முதலாளிகள், தமிழ் வருஷப் பிறப்புக்கு விடுமுறை அளிக்க மறுத்தார்கள். அதன் பேரில் சுமார் நானூறு தொழிலாளிகள் அரை நாள் தாங்களாகவே லீவு எடுத்துக் கொண்டார்கள்.

மறுநாள் அவர்களை வேலைக்கு எடுத்துக் கொள்ள முதலாளிகள் மறுக்கவே, சகோதரத் தொழிலாளிகளிடம் அநுதாபங்கொண்டு மற்றத் தொழிலாளிகளும் வேலை நிறுத்தம் செய்தார்கள்.

போலீஸார் அவர்களில் பலருடைய மண்டையை உடைத்த பிறகு, சர்க்காரால் 'சர்வரோக நிவாரணி'யான மத்தியஸ்தர் நியமிக்கப் பட்டார்.

அவருடைய தீர்ப்பு முதலாளிகளுக்குச் சாதகமாக இருந்தது. அதனால்தானோ என்னவோ, அந்தத் தீர்ப்பைப் பிரகாசம் சர்க்கார் மறுதளிக்கவில்லை.

எண்ணூறு தொழிலாளிகளை, முதலாளிகள் வீட்டுக்கு அனுப்பி வைத்தார்கள். !





# 12

# கவனிப்பார்களா?

பிரசித்தி பெற்ற ஆகஸ்ட் கலவரத்துக்குப் பின்னால் காங்கிரஸ் தலைவர்களுக்குள்ளேயே ஏற்பட்ட பூசலின் காரணமாகக் காங்கிரஸ் ஓரளவு பொதுஜனச் செல்வாக்கை இழந்திருந்ததென்பது யாரும் மறுக்கமுடியாத உண்மை.

எதிர்பாராத விதமாக யுத்தம் திடீரென்று முடிந்து, நேதாஜி சுபாஷ் சந்திர போஸின் இந்தியத் தேசீய ராணுவத்தைப் பற்றிய, பிரமிக்க வைக்கும் செய்திகள் வெளியாகி, செங்கோட்டை விசாரணை நடந்ததன் காரணமாகத்தான் காங்கிரஸ் பழையபடி பரிபூரணச் செல்வாக்கை யடைந்தது.

இந்தச் செல்வாக்கை இழந்துவிட்டால் மீண்டும் பெறுவது இலேசான காரியமல்ல.

இன்னொரு நேதாஜியும், இன்னொரு இந்தியத் தேசீய ராணுவமும், இன்னொரு செங்கோட்டை விசாரணையும் நடப்பது துர்லபம் !

ஆகவே, என்ன இருந்தாலும் தாங்கள் பொதுஜனச் சேவகர்கள் என்பதைக் காங்கிரஸ்காரர்கள் மறந்துவிடக் கூடாது

தொழிலாளிகளுக்குத் துரோகம் செய்வதன் மூலம் பொதுஜனச் செல்வாக்கை இழந்துவிடக் கூடாது.

இப்பொழுது போகிற போக்கிலேயே போனால் மேற்கூறிய நிலைமையைக் காங்கிரஸ் அடைவதற்கு அதிக நாட்கள் பிடிக்காது.

மாகாணங்களில் மந்திரி பதவிகளை ஏற்றுக் கொண்டிருக்கும் காங்கிரஸ்காரர்கள், உடனே தங்கள் கொள்கையை மாற்றியமைத்துக் கொள்ள வேண்டியது அவசியமும் அவசரமுமாகும்.

அதிலும் சென்னைப் பிரகாசம் சர்க்கார் இந்த விஷயத்தில் காலதாமதம் செய்யவே கூடாது.

தொழிலாளிகளுடைய நலனுக்காக அவர்கள் தங்களுடைய கொள்கையை மாற்றிக் கொள்ளா விட்டாலும், தங்களுடைய சுயநலத்திற்காகவாவது மாற்றிக் கொள்ள வேண்டும். !

இவ்வாறு செய்வதை விட்டுவிட்டு, வாழ்க்கையில் சொல்ல வொண்ணாத துயரத்துக்கு ஆளாகும் தொழிலாளியிடம் உள்ள ஒரே ஒரு ஆயுதமான சங்கத்தைக் கலைப்பதற்கும், முதலாளிகளின்

பேராசையை எதிர்த்துப் போராடுவதற்கு அவனிடம் இருக்கும் ஒரே ஒரு ஆயுதமான வேலைநிறுத்த உரிமையைப் பறிப்பதற்கும் முயற்சி செய்வது நல்லதுமல்ல; நன்மை பயப்பதுமல்ல.

தொழிலாளிகளின் வேலை நிறுத்தப் போராட்டங்கள் அரசியல் விடுதலைப் போராட்டங் களைப் போன்றவை யல்ல; அவர்களுடைய வாழ்க்கைத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளுவதற்காக எழுந்த போராட்டங்களாகும்.

அவை தொடங்கிவிட்டால் என்றும் பின்னடை வதில்லை.

ஏனெனில், அவற்றை நடத்தும் சக்தி எந்தத் தலைவரின் கையிலும் இருக்காது; தொழிலாளரின் கையில்தான் இருக்கும்.

ஆகவே, தலைவர்களின் தயவில்லாமலே மேற்கூறிய போராட்டங்கள் போதிய வளர்ச்சியை அடைந்துவிடும்.

வேண்டுமானால் தலைவர்களையும் தானே உண்டாக்கிக் கொண்டுவிடம்.

தபால் ஊழியர்களும் ரயில்வே தொழிலாளி களும் சம்பள உயர்வு கோரி வேலை நிறுத்தம் செய்த போது, சர்க்கார் அவர்களுக்கும் குறைவாகச் சம்பளம்

பெறும் தொழிலாளிகளைச் சுட்டிக்காட்டிப் பரிகாசம் செய்தது.

தொழிலாளருடைய பிரச்சினை சம்பள உயர்வு மட்டும் அல்ல என்பதை அவர்கள் உணரவேண்டும். உழைப்பின் பயனாய் வரும் செல்வம் உழைப்பவனுக்கே உரியது என்ற அடிப்படையில், தேசத்தின் செல்வம் தேசமக்களுக்கே உரியது என்ற அடிப்படையில் எழுந்த பிரச்சினை அது.

அந்தப் பிரச்சினையைப் புறக்கணித்தால் தொழிலாளிகளின் வேலை நிறுத்தப் போராட்டம், நாளடைவில் பொதுஜனங்களின் பொருளாதார விடுதலைப் போராட்ட மாகிவிடும்.

இந்தப் போராட்டம் ஆரம்பமாகிவிட்டால் உழைக்காமல் உண்ணும் முதலாளிகள் எந்த வேஷந் தரித்தாலும் பொதுமக்களிடையே இடம் பெற முடியாது.

ஆகவே, மேற்கூறிய நிலை வருவதற்கு முன்னால் தேசீயம் என்னும் போர்வைபோர்த்த தலைவர்களும் கட்சிகளும், பத்திரிக்கைகாரர்களும் தங்கள் தங்கள் கொள்கையை மாற்றிக் கொள்ளவேண்டும்.

இதை அவர்கள் கவனிப்பார்களா?



விந்தன் எழுதிய

# தெருவிளக்கு



முதல் அத்தியாயம்

**பொ**ழுது புலர்ந்தது!

ஆம், "யார் எக்கேடு கெட்டாலும் பரவாயில்லை, தன் காரியம் எந்த விதமான விக்கினமும் இன்றி நடந்தால் சரி!" என்று நினைக்கும் சுயநலவாதியைப் போலச் சூரியன் வழக்கம் போல் கிழக்கே உதயமானான்.

அவனைக் கண்டதும் புழுதி மிக்க அந்தத் தெருவிலே புள்ளினங்கள் ஆர்க்கவில்லை; விரைந்து செல்லும் 'சைக்கிள்' மணிகளும் பறந்து செல்லும் காரின் ஹாரன்களும் தான் ஆர்த்தன.

செந்நிறக் கிரணங்களை வீசி அந்தத் தெருவைப் பொன்னிற மாக்கவில்லை அவன், போக்கிடம் அற்றவர்கள் புழுதியின் நிறத்தை ஒத்திருந்ததால்!

கட்சிச் செலவில் சேவை செய்யும் அரசியல் வாதியைப் போலக் கார்ப்பொரேஷன் செலவில் அவர் களுக்காக இரவெல்லாம் கண் விழித்துச் சேவை செய்த மயக்கத்தில் பொழுது விடிந்ததுகூடத் தெரியாமல்

*தெருவிளக்கு தூங்கிக் கொண்டிருந்தது; விழித்துக் கொண்ட சென்னை மாநகரமோ அதன் தூக்கத்தைப் பொருட்படுத்தாமல் வழக்கம் போல் விரோதமும் குரோதமும் நிறைந்த தன் அசட்டுக் குழந்தைகளை எழுப்பி விளையாட விட்டது*

*அந்தக் குழந்தைகளில் சில மாடி வீடுகளில் வசிப்பவை; வேறு சில மண் குடிசைகளில் வசிப்பவை. மண் குடிசையில் வசிக்கும் குழந்தைகளுக்குத் தெரு விளக்கு 'பொதுவுடமை வாதி'யாகக் காட்சியளித்தது; மாடி வீட்டில் வசிக்கும் குழந்தைகளுக்கோ, அது 'இல்லாதவன் இருட்டில் செய்யும் பொல்லாமை யிலிருந்து தங்களைக் காக்கும் வல்லவ'னாகக் காட்சியளித்தது.*

*இந்தக் குழந்தைகளைத் தவிர இன்னும் சில குழந்தைகளும் மேற்படி நகரத்தில் இருந்தன; அவை அனாதைக் குழந்தைகள் - அந்தக் குழந்தைகளுக்கு மாடி வீடும் இல்லை, மண் குடிசையும் இல்லை - ஆனால் மனம் இருந்தது!*

*மனம் இருக்கும் இடத்திலே பணம் இருக்குமா? இல்லை, பணம் இருக்கும் இடத்திலே மனந்தான் இருக்குமா? - இத்தகைய இரண்டுங் கெட்டான் உலகிலே, எண்ணெயோ மின்சாரமோ இன்றி எரியக் கூடிய விதத்தில் எவனோ கொடுத்த இரு கண்*

விளக்குகளையும் இழந்துவிட்டு, அந்தத் தெரு விளக்கின் அடியிலே 'இரந்து உயிர் வாழ்ந்து கொண்டிருந்தாள்' ஒருத்தி - 'பரந்து கெடுக இவ்வுல கியற்றியான்!' என்ற வள்ளுவப் பெருந்தகையாரின் சாபம் இன்றுவரை பலிக்காததால்!

அவள்தான் முத்தாயி - அவளுக்கு ஒரு மகன்; பெயர் ரத்தினம்.

முத்தாயிக்கு அவள் கணவன் வைத்து விட்டுப் போன ஒரே சொத்து ரத்தினம் அந்தச் சொத்துக்கு மனம் இருந்ததோடு மானமும் இருந்து தொலைந்தது - உருப்படவா? - ஊஹூம்!

முதல் நாள் முழுவதும் மூட்டை தூக்கிச் சம்பாதித்த காசில் மிச்சம் பிடித்து வைத்திருந்த ஓரணாவுக்கு இரண்டு இட்டிலிகளை வாங்கித் தாயாருக்கு எதிரே வைத்துவிட்டுக் குடி தண்ணீருக் காகத் தெருக் குழாயைத் தஞ்சமடைந்திருந்தான் அவன் - அங்கும் ஏகப் போட்டி - ஜாதி, சமய, அனுஷ்டான, பொருளாதார ஏற்றத் தாழ்வுகளை வைத்து!

பாவம், தெருக் குழாய் என்ன செய்யும்? அவர்களுடைய அறியாமையைக் கண்டு அழுவது போலச் சொட்டுச் சொட்டாகக் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தது.

காத்துக் காத்துப் பார்த்தாள் முத்தாயி; தண்ணீருக்குப் போன மகனைக் காணவே காணோம் - "சரி, இட்டிலியைச் சாப்பிட்டு வைப்போம்; தண்ணீர் வரும் போது வரட்டும்!" என்று தட்டை எடுக்கத் தரையைத் தடவினாள் - அதையும் காணோம்!

"இங்கேதானே வைத்து விட்டுப் போனான், எங்கே போயிருக்கும்?" என்று மறுபடியும் தடவினாள் - இல்லை, இல்லவே இல்லை.

ஒன்றும் புரியாமல் விழித்துக் கொண்டிருந்த போது, யாரோ இருமிக் கொண்டே சிரிக்கும் சத்தம் அவள் காதில் விழுந்தது. அந்தச் சத்தத்திலிருந்து ஆளை இனங் கண்டு கொண்டு, "ஏன் ஆரோக்கியசாமி, இங்கே இருந்த இட்டிலியைப் பார்த்தாயா?" என்று கேட்டாள் முத்தாயி.

"பார்த்தேன், பார்த்தேன்!" என்று அவளுக்குத் தெரியாமல் அந்த இட்லிகளை எடுத்துக் கொண்ட அவன், அவற்றைப் பிட்டுப் பிட்டு விழுங்கிக் கொண்டு இருந்தான்!

விஷயத்தைப் புரிந்துகொண்ட முத்தாயி அவனுடன் சண்டை பிடிக்கவில்லை; போலீஸாரைக் கூப்பிட்டு அவனை ஒப்படைக்கவும் இல்லை - "ஐயோ பாவம், ரொம்பப் பசி போலிருக்கிறது - சாப்பிடு,

சாப்பிடு!" என்று தாராளமாக அனுமதி கொடுத்து விட்டாள்.

மகன் வந்து, "என்னம்மா, இட்லியைச் சாப்பிட்டு விட்டாயா?" என்று விசாரித்தான். "இவ்வளவு நேரம் உனக்காகக் காத்திருந்து பார்த்துவிட்டு இப்பொழுது தான் சாப்பிட்டேன் - கொண்டா, தண்ணீரை!" என்று வாங்கிக் குடித்துவிட்டு, "இன்று வேலையுண்டா, உனக்கு?" என்று கேட்டாள் அவள்.

"இல்லையம்மா, அடுத்த வெள்ளிக் கிழமை கப்பல் வந்தால்தான் வேலை!" என்றான் அவன்.

"சரி, புறப்படு!" என்று அருகிலிருந்த கோலை எடுத்து ஊன்றிக்கொண்டு எழுந்தாள் அவள்.

"வேண்டாம்மா, எனக்கு வெட்கமாயிருக்கும்மா! உன்னோடு பிச்சை எடுக்க இனிமே நான் வரவே மாட்டேம்மா..."

"இதிலே என்னடா, வெட்கம்? நாமென்ன திருடுகிறோமா, தில்லுமுல்லு செய்கிறோமா ..?"

"திருடர்களும் தில்லுமுல்லுக்காரர்களும் வெட்கப் பட்டால்தான் நமக்கெல்லாம் இந்தக் கதி வந்து இருக்காதேம்மா!" என்றான் அவன்.

"அந்த வம்பெல்லாம் நமக்கெதுக்கு? - நீ வா!" என்றாள் அவள்.

"இந்த மனோபாவத்தைத்தான் அவர்களும் விரும்புகிறார்கள்!"

"அதற்காக.. ?"

"அவர்களைப்போல நாமும் திருடர்களாக மாற வேண்டும். எனக்கென்னமோ பிச்சை எடுப்பதை விட அதுதான் மேலெனத் தோன்றுகிறது..."

"ஐயோ, வேண்டாம் கண்ணு - ஒருவர் பொருளை ஒருவர் திருடுவது பாவம்!"

"புண்ணியத்தைக் கண்டால்தான் பாழும் பொருள் ஓட்டம் பிடிக்கிறதேம்மா!"

"அதனால் என்ன? ஆண்டவன் கூடவா நமது பங்கில் இருக்க மாட்டார்?"

"ஏன் இல்லாமல்? - இல்லாவிட்டால் பிச்சை எடுத்துத் தின்ன உபயோகமாயிருக்கட்டுமென்று உன் கண்களைப் பறித்திருப்பாரா?"

"பலே பலே, அப்படிச் சொல்லு!" என்று இந்தச் சமயத்தில் உற்சாகம் மிக்க ஒரு குரல் கேட்டது. ரத்தினம் திரும்பிப் பார்த்தான்.

"நீ திருடனாக மாறினால் நானும் திருடனாக மாறத் தயார்!" என்று அவனுக்குத் தன் மேலான ஆதரவைத் தெரிவித்துக் கொண்டான் அவன் நண்பன் அந்தோணி.

"அவ்வளவுதான்; இப்படி எல்லோருமே மாறி விட்டால் உங்கள் ஏசுவின் உலகம் என்ன ஆகும், தெரியுமா? - சைத்தானின் உலகமாக மாறும்!" என்றாள் முத்தாயி.

"ஆஹா! இருப்பவன் வீட்டை இல்லாதவன் கொள்ளையடிப்பதற்கு மட்டும் துணிந்து விட்டால் புரட்சி முளைக்கும்; புத்துலகம் பூக்கும்!" என்றான் அந்தோணி.

"இரண்டும் நடக்காது; இருட்டறையில் இடந்தான் கிடைக்கும்!" என்றாள் முத்தாயி.

"தனித் தனியாகச் சென்று ரகசியமாகக் கொள்ளையடித்தால்தானே?" - நாங்கள் தான் ஒரே கூட்டமாகச் சென்று பகிரங்கமாகக் கொள்ளையடிக்கப் போகிறோமே!" என்றான் ரத்தினம்.

"இந்தச் சமயத்தில் "மூளையில்லாத பயல்கள்!" என்று யாரோ முணுமுணுக்கும் சத்தம் அவர்கள் காதில் விழுந்தது. அந்தோணியும் ரத்தினமும் திரும்பிப் பார்த்தனர்;

"எதைச் செய்தாலும் ரகசியமாகச் செய்யுங்கள். காசுக்குக் காசும் கிடைக்கும்; கௌரவத்துக்குக் கௌரவமும் கிடைக்கும்!" என்று தொடர்ந்தான் 'இட்டிலித் திருட'னான ஆரோக்கியசாமி.

"பூர்வ ஜன்மத்தில் இவன் 'பெரிய மனிதர் வீட்டுப் பிள்ளை'யாகப் பிறந்திருக்க வேண்டும் - நீ என்ன நினைக்கிறாய்?" என்று கேட்டான் அந்தோணி.

"ஆமாம் ஆமாம் - இல்லாவிட்டால் அந்த வாடை இன்னும் அவனிடம் அடித்துக் கொண்டிருக்குமா?" என்று தன் நண்பன் சொன்னதை ஆமோதித்தான் ரத்தினம்.

அதற்குள் அவனைப் பொருட்படுத்தாமல் தன்னந் தனியாகத் தட்டுத் தடுமாறிக் கொண்டே நடக்க ஆரம்பித்துவிட்டாள் முத்தாயி. அப்போது தினசரிப் பத்திரிகை யொன்றைப் பிரித்துப் பார்த்தபடி அவளுக்கு எதிரே வந்தான் ஒருவன். அவள் மேல் அவன் மோதிக்கொண்டு, "ஏன் கிழவி, உனக்குக் கண் தெரியவில்லையா?" என்றான்.

"எனக்குத்தான் தெரியவில்லை; உனக்குமா தெரிய வில்லை?" என்று திரும்பக் கேட்டாள் அவள்.

அவளை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, "ஓ, நீ குருடியா? - சரி சரி, போ!" என்று அவளை விரட்டி விட்டு, மீண்டும் பத்திரிகையைப் பார்ப்பதில் தன் கவனத்தைச் செலுத்தினான் அவன்.

"ஆமாண்டா! அவள்தான் குருடி; உனக்குத்தான் கண்ணிருக்கே - நீ பார்த்துப் போவதற்கு என்ன கேடு?" என்று அவன் கன்னத்தில் அறைந்தான் ரத்தினம்.

அதற்குள் ஏதோ ஒரு செய்தி அவன் உள்ளத்தைத் துள்ள வைத்தது. உடனே ரத்தினம் அடித்ததைக் கூடப் பொருட்படுத்தாமல் அவனுடைய முதுகில் தட்டிக் கொடுத்து, "ஓ.கே! இதோ பார், இன்றே நான் பிரேமலீலா பிக்சர்ஸ் டிரைவராவேன்; அப்புறம் நடிகனாவேன்; அதற்குப் பின் படாதிபதியாவேன்!" என்று பைத்தியக்காரனைப் போல உளறிக்கொண்டே அவன் எடுத்தான் ஓட்டம்!

இரண்டாம் அத்தியாயம்

## "பிரேமலீலா பிக்சர்ஸ்"

"அப்பப்பா! 'டிரைவர்கள் தேவை' என்று பத்திரிகையில் ஒரு வரி போட்டாலும் போட்டு விட்டார், விடிந்ததும் விடியாததுமா யிருக்கும்போதே எல்லாரும் வந்து என் உயிரை வாங்குகிறார்களே!" என்று அலுத்துக் கொண்டே, வந்தவர்கள் அனை வரையும் 'விஸிட்டர் ஹா'லில் உட்கார வைத்துவிட்டு வெளியே வந்தான் 'ப்ரொடக்ஷன் மானேஜர்' பீதாம்பரம்.

அப்போது பத்து முழம் சேலையைப் பட்டும் படாமல் கட்டுவதைக்கூடச் சிரமமாகப் பாவிக்கும்

அளவுக்கு 'முன்னேறிவிட்ட எதிர்கால நட்சத்திரங்கள்' சில 'கலகல'வென நகைத்தபடி உள்ளே நுழைந்தான.

அவர்களுடைய சிரிப்பொலி பீதாம்பரத்தின் அலுப்பைக் கொஞ்சம் தீர்த்தது; "வீணையடி நீ எனக்கு, மேவும் விரல் நானுனக்கு!" என்று தன்னை மறந்து எங்கேயோ பார்த்தபடிப் பாடக்கூட ஆரம்பித்து விட்டான் அவன்!

அந்தச் சமயத்தில், "அங்கே எந்தக் கழுதை கத்தறது?" என்று இடிக் குரல் ஒன்று உள்ளேயிருந்து வந்தது.

பீதாம்பரம் 'சட்'டென்று பாட்டை நிறுத்திவிட்டுச் சுற்றுமுற்றும் பார்த்தான். ரத்தினத்தின் அறையிலிருந்து தப்பி வந்த ஆசாமி அவனுக்கு எதிரே வந்து நின்று, "ஏன் ஓய், இதுதானே பிரேமலீலா பிக்சர்ஸ்? என்று விசாரித்தான்.

எப்படியிருக்கும் பீதாம்பரத்துக்கு. "அப்படித்தான் சொல்கிறார்கள்!" என்றான் வெறுப்புடன்.

"ஓ கே! இங்கே 'ப்ரொடக்ஷன் மானேஜர்'னு ஒரு மடையன் இருப்பானே, அவன் எங்கே இருக்கான்?" என்று கேட்டான் அவன்.

தூக்கி வாரிப் போட்டது போலிருந்தது பீதாம்பரத்துக்கு. ஓ.கே.யை அவன் எரித்து விடுபவன் போல் பார்த்தான்.

"ஓ, அந்த மடையன் நீதானா? - ஐ ஆம் வெரி ஸாரி - கவலைப்படாதே, நானும் மடையன்தான்! - வா போவோம், உள்ளே!" என்று வந்தவன் இருந்தவனை அழைத்தான்.

பீதாம்பரத்துக்கு ஒன்றும் புரியவில்லை; அவனைப் பார்த்தது பார்த்தபடி நின்றான்.

"என்ன சந்தேகம், உனக்கு? கீழ்ப்பாக்கத்திலிருந்து தப்பி வந்துவிட்டேன் என்று நினைக்கிறாயா? - அதெல்லாம் ஒன்றுமில்லை; நானும் டிரைவர்தான் - வா வா!" என்று பீதாம்பரத்தைப் பலவந்தப்படுத்தி உள்ளே தள்ளிக்கொண்டு சென்றான் ஓ.கே.

"மரியாதையாகச் சொல்கிறேன் - பேசாமல் இப்படி உட்கார்!" என்றான் பீதாம்பரம்.

"அப்படி உட்கார்ந்தால் அவர்களுக்கும் எனக்கும் என்ன வித்தியாசம்?" என்று மற்றவர்களைச் சுட்டிக் காட்டினான் ஓ கே

"உட்காரப் போகிறாயா, இல்லையா?"

'இல்லை!"

"சரி, நட வெளியே!"

"அதை நீ சொல்ல வேண்டாம்; முதலாளி வந்து சொல்லட்டும் "

"இதென்னடா வம்பு? - அவர் இன்னும் எழுந்திருக்கவில்லை, ஐயா!"

"எழுந்திருக்க வில்லையா! - உன்னால் எழுப்ப முடிய வில்லை என்று சொல்லு!" என்று அருகிலிருந்த வீணையை எடுத்து மீட்டிப் பூபாளத்தைப் போடு போடென்று போட்டான் ஓ.கே.

பீதாம்பரம் அதைத் தடுத்து, "பூபாளம் வாசிக்க இங்கே எத்தனையோ பேர் இருக்கிறார்கள்; நீ எழுந்திரு!" என்றான்.

அதற்குள், "அங்கே என்ன சத்தம்?" என்ற இடிக் குரல் மறுபடியும் உள்ளேயிருந்து வந்தது.

"ஒன்றுமில்லை..." என்று கையைப் பிசைந்த வண்ணம் இழுத்துக் கொண்டே கதவை மெல்லத் திறந்து எட்டிப் பார்த்த பீதாம்பரம், சட்டென்று தலையை வெளியே இழுத்துக்கொண்டு 'திருதிரு' வென்று விழித்தான்.

காரணம், 'அண்டர் கிரவுண்ட் பிராந்தி'யால் 'செந்தாமரைக் கண்ண'னாகப் பட்ட முதலாளி, "கோபியர் வேஷத்தில்' பல பெண்கள் சூழ அங்கே அரியாசனத்தில் வீற்றிருந்தார், 'கொஞ்சும் ரமண'னாக!

*"கந்த லீலா அல்லவா எடுக்கப் போவதாகச் சொன்னார்!" இப்படி முணுமுணுத்தது பீதாம்பரத்தின் வாய்*

*"அதிலே ரெண்டு 'ஹீரோயி'னுக்கு மேலே வேலை இருக்காதே!" பதிலுக்கு இப்படி முணுமுணுத்தது ஓ.கே.யின் வாய்*

*"அதற்காக இங்கே 'கிருஷ்ண லீலா'வுக்கு 'ஒத்திகை' நடக்கிறதா உன் நெனைப்போ?"*

*"ஊஹூ¯ம்; ஏகப்பட்ட 'ஹீரோயின்'களுக்குச் 'சான்ஸ்' இருந்தாத்தானே எல்லாவற்றுக்கும் சௌகரியமாயிருக்கும்னு சொன்னேன்!"*

*"ஏது! பலே ஆளாயிருக்கியே, நீ? - முதலாளி காப்பி சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார் ஐயா, ஒரு நிமிஷம் அப்படிப் போய் உட்காரும்; இதோ வந்து விடுவார்!"*

*"ரொம்ப நல்லதாப் போச்சு! எனக்கும் காப்பி சாப்பிட்டாத் தேவலை போலிருக்கு!" என்று பீதாம்பரத்தை இழுத்து அப்பால் விட்டுவிட்டுச் சரேலென்று உள்ளே நுழைந்துவிட்டான் ஓ கே.*

*"நம்பர் 93 - போன் ப்ளீஸ்! நம்பர் 93 - போன் ப்ளீஸ்!" என்று கத்தினான் பீதாம்பரம்.*

"பேசாமல் இருடா, முட்டாள்!" என்று அவனை அடக்கிவிட்டு, "யாரப்பா. நீ?" என்று ஓ.கே.யை விசாரித்தார் படாதிபதி பத்மனாபன்.

"மன்னிக்க வேண்டும்; நான் டிரைவர்.. பத்திரிகையில் உங்கள் விளம்பரத்தைப் பார்த்தேன்..." என்று முதலாளியிடம் எப்படிப் பேச வேண்டுமோ, அப்படிப் பேசினான் ஓ.கே.

"எதற்கு மன்னிப்பது? - உன்னைப் போன்ற ஆட்கள் தாம்ப்பா எனக்கு வேணும்... ஏய் பீதாம்பரம், இன்னிக்கு வந்த 'பாண்டியாக்'கை இவனுக்குக் காட்டு... போப்பா, போய் அதை ஓட்டிக்கொண்டு வந்து வெளியே நிறுத்து!" என்று உடனே அவனுக்கு வேலை கொடுத்து விட்டார் பத்மநாபன்.

பீதாம்பரம் வேறு வழியின்றி ஓ.கே.யை அழைத்துக் கொண்டு 'ஷெட்'டுக்குச் சென்றான். அவன் தலை மறைந்ததும், "இந்தப் பீதாம்பரத்துக்குப் பதிலா நல்ல ராஜபாளையம் நாயா ஒண்ணு வாங்கி வளர்த்தாலும் நாயா உபயோகமாயிருக்கும்!" என்று படாதிபதி தலையில் அடித்துக்கொண்டார்.

மூன்றாம் அத்தியாயம்

# கழுதையும் நாயும்

**கா**ரைக் கொண்டுவந்து வாசலில் நிறுத்திவிட்டுப் படாதிபதி பத்மநாபனை எதிர்பார்த்தபடி நின்றான் ஓ.கே. அப்போது பத்துப் பதினைந்து ஜதை பர்மா பாதரட்சைகளைத் தூக்க முடியாமல் தூக்கிக்கொண்டு அவனுக்க எதிரே வந்தான் ப்ரொடக்ஷன் மானேஜர் பீதாம்பரம்.

"இவ்வளவு சிரமம் உங்களுக்கு ஏன் ஐயா, யாராவது ஒரு பையனிடம் கொடுத்தனுப்பி இருக்கலாமே?" என்றான் ஓ.கே.

"அது எனக்குத் தெரியும்; நீ போ அப்படி!" என்று அவனை அதட்டிக்கொண்டே பீதாம்பரம் காரின் கதவை நெருங்கினான்.

ஓ.கே. இருந்த இடத்தை விட்டு அசையாமல், "தெரிந்தால் சரி!" என்று சொல்லிவிட்டு அவனை ஒரு தினுசாகப் பார்த்தான்.

"போகிறாயா, இல்லையா?"

"எங்கே போக வேண்டும் என்று சொன்னால் தானே போவதற்கு?"

"உன் ஸீட்டுக்கு!" என்று வெறுப்புடன் சொல்லிக் கொண்டே, அவனைத் தன் தோளால் கொஞ்சம் நெட்டித் தள்ளிவிட்டுப் பாதரட்சைகளைப் பின் ஸீட்டில் பயபக்தியுடன் வைத்தான் பீதாம்பரம்

"தேவலையே, பரதன் ஒரு ஜதைக்குப் பட்டாபிஷேகம் நடத்தினால் நீங்கள் ஒன்பது ஜதைக்குப் பட்டாபிஷேகம் நடத்துகிறீர்களே?" என்றான் ஓ.கே.

"அது என் இஷ்டம்; நீ போய் உன் வேலையைப் பார்!"

"என் வேலையைத் தவிர, பிறர் வேலையில் நான் எப்பொழுதுமே தலையிடுவதில்லை."

"கதவுக்கருகே நிற்பதா உன் வேலை?"

"ஆமாம்."

"இல்லை; கார் ஓட்டுவதுதான் உன் வேலை!"

"இரண்டும்தான்! முதலாளி வந்ததும் கதவைத் திறந்து விட்டுவிட்டு நிற்பேன்; ஏறி உட்கார்ந்ததும் ஓட்டுவேன்...!"

"முடியாது; கதவை நான் தான் திறப்பேன்!"

"மன்னிக்கவும்; அது உங்கள் வேலையல்ல."

"என் வேலைதான்!"

"சரி, பார்த்துவிட்டால் போச்சு!"

"நீ யாரடா பார்ப்பதற்கு? - எட்டிப் போடா, கழுதை!" என்று அவனைப் பிடித்து அப்பால் தள்ளினான் பீதாம்பரம்.

அப்பொழுதும் அவன் அசைந்து கொடுக்காமல், "தப்பு; உங்களுக்கு சேரவேண்டிய கௌரவத்தை எனக்காக நீங்கள் விட்டுக் கொடுக்கப் பார்ப்பது ரொம்ப ரொம்பத் தப்பு! அடியேன் நாய்; தாங்கள்தான் என் மதிப்பிற்குரிய கழுதை!" என்றான்.

"ஜாக்கிரதை! உனக்குக் குரைக்கத் தெரிந்தால் எனக்கு உதைக்கத் தெரியும்!" என்றான் அவன் கோபாவேசத்துடன்.

"உனக்கு உதைக்கத் தெரிந்தால் எனக்குக் கடிக்கத் தெரியும்!" என்றான் ஓ கே.

பீதாம்பரத்துக்கு ஆத்திரம் தாங்கவில்லை; அவன் கன்னத்தில் பளீரென்று அறைந்து விட்டான்.

வழக்கம் போல் அதையும் பொருட்படுத்தாமல், "ஓ.கே! கதை தெரியுமா, உங்களுக்கு?" என்று கேட்டுக்கொண்டே பீதாம்பரத்தின் முதுகில் தட்டிக் கொடுத்தான் அவன்.

அதற்குள், "என்ன கதை?" என்று கேட்டபடி, அங்கே வந்து விட்டார் பட அதிபதி.

"ஏறுங்கள், சொல்கிறேன்!" என்று அவருக்குக் கதவைத் திறந்து விட்டுவிட்டு, "வரட்டுமா! சீரியோ?" என்று பீதாம்பரத்தை நோக்கிக் கையை ஆட்டிய வண்ணம் விடை பெற்றுக்கொண்டான் ஓ.கே

கார் கிளம்பிற்று "இனிமேல் பிடிக்க வேண்டிய காக்காக்களையெல்லாம் இந்தப் பயலே பிடித்து விடுவான் போலிருக்கிறதே? இவனை முதலில் தொலைக்க வேண்டும்!" என்று கருவிக்கொண்டே பீதாம்பரம் திரும்பினான்

"கதையைச் சொல்லவே யில்லையே?" என்றார், காசில்லாமல் கதை தேடுவதிலேயே எப்பொழுதும் கவனமாயிருக்கும் படாதிபதி பத்மநாபன்.

"சொல்கிறேன் - இப்போ எங்கே போக வேண்டும் என்று நீங்கள் சொல்லவேயில்லையே?" என்றான் ஓ கே.

"ஸ்பென்ஸர்!" என்று சொல்லிவிட்டு, 555 சிகரெட் ஒன்றை எடுத்துத் தட்டிப் பற்ற வைத்தார் படாதிபதி

"எங்கள் கதையில் உங்களுக்கொன்றும் சம்பந்த மில்லையே?" என்றான் ஓ கே.

"பரவாயில்லை. சொல்லு? படத்துக்கு உபயோகம் ஆகுமா என்று பார்க்கிறேன்"

"சலவையாளர் ஒருவர் வீட்டில் நாய் ஒன்று இருந்தது .."

"கழுதைதானே இருக்கும்?"

"அதுவும் இருந்தது; ஆனால் அது நம் பீதாம்பரத்தைப்போல அசட்டுக் கழுதையாயிருந்தது! ஒரு நாள் சலவையாளர்மேல் நாய்க்கு ஏதோ கோபம்; திருடன் வீட்டருகே வந்த பிறகுங்கூட அது குரைக்காமல் இருந்தது. கழுதையால் சும்மா இருக்க முடியவில்லை; நாய்க்குப் பதிலாகத் தானே கத்தி எஜமானை எழுப்ப முயன்றது. அதன் பலன் என்ன வென்கிறீர்கள்! தூக்கங்கெட்ட கோபத்தில் சலவையாளர் எழுந்து வந்து, கழுதையை 'வெளுவெளு' என்று வெளுத்துவிட்டார்!"

"சரிதான், நீயும் அவனும் வேண்டுமானால் கழுதையும் நாயுமாக இருங்கள்; என்னைச் சலவை யாளராக்க வேண்டாம்!" என்றார் பத்மனாபன்

"இதற்குத்தான் அப்பொழுதே நான் யோசித்தேன்!" என்றான் ஓ.கே.

அதற்குள் கார் ஸ்பென்ஸரை அடைந்தது "உனக்கு 'ஸ்பான்ஜ்' என்றால் என்னவென்று தெரியுமோ?" என்று கேட்டார் படாதிபதி.

*"ஓ, தெரியுமே! காய்ந்த பீர்க்கங்காயின் கூடுக்குப் பதிலாகப் பெரிய மனிதர் வீட்டுப் பெண்கள் உடம்பைத் தோய்த்துக் குளிப்பதற்காக உபயோகிக்கும் கடற்பஞ்சு!"*

*"பலே, நம்ம ஹீரோயின் நிசிலீலாவுக்கு அது ஒன்று வேண்டுமாம்; நீ எதற்கும் நாலாக வாங்கிக் கொண்டு வந்துவிடு!" என்று இரு நூறு ரூபாய் நோட்டுக் களை எடுத்து அவனிடம் நீட்டப் போனவர் திடீரென்று ஏதோ நினைத்துக் கொண்டவராய், "வேண்டாம், வேண்டாம் - நீ இங்கேயே இரு; நானே போய் வாங்கிக் கொண்டு வந்து விடுகிறேன்!" என்று சொல்லிவிட்டுப் போனார்.*

*"அட பாவமே, அந்தப் பாக்கியம் கூடவா எனக்கு இல்லை?" என்று தனக்குத் தானே முணுமுணுத்துக் கொண்டான் ஓ.கே.*

## நான்காம் அத்தியாயம்

# "கோலாகலா ஸ்டூடியோ"

*விஷயம் என்னவென்றால், அன்றைக்கு முந்திய நாள் இரவு பிரபல நட்சத்திரங்களான மிஸ்டர் கலா மோகனுக்கும் மிஸ் நிசிலீலாவுக்கும் கோலாகலா ஸ்டூடியோவில் 'ஷூட்டிங்' இருந்தது.*

'கால்-ஷீட்' முடிவதற்கு ஒரு மணி நேரம் இருக்கு முன்பே நிசி லீலா அவசர அவசரமாக 'மேக்-அப்'பைக் கலைக்கத் தயாரானாள்.

அவள் மேல் ஈ உட்கார்ந்தால் கூட 'எலெக்ட்ரிக் ஷாக்' அடித்தாற்போல் துள்ளும் படாதிபதி, "என்ன, என்ன?" என்று பரபரப்புடன் கேட்டுக்கொண்டே மேக்-அப் அறையை நோக்கி விரைந்தார்.

அந்த அறையின் கதவை நெருங்கியதும் தனக்குப் பின்னால் இரைக்க இரைக்க ஓடி வந்த பீதாம்பரத்தை அவர் ஒரு பக்கமாக ஒதுக்கித் தள்ளிவிட்டு, "என்ன லீலா, என்ன நடந்தது? எந்தப் பயல் உன்னை என்ன சொன்னான்? - சொல்லு, அவனை உடனே சுட்டு வீழ்த்திவிட்டு மறு காரியம் பார்க்கிறேன்!" என்று 'ரிவால்வ'ரை எடுக்க ஜிப்பாப் பையில் வையை விட்டார்.

"ஒன்றும் நடக்க வில்லை!" என்று சர்வ சாதாரணமாகச் சொல்லிக் கொண்டே, வெல்வெட் ஜாக்கெட்டைக் கழற்றிய லீலா, திடீரென்று கட்டை விரலை அழுத்திப் பிடித்துக்கொண்டு 'அப்பப்பா!' என்று துடித்தாள்.

படாதிபதி பதறிப்போய் அவள் கட்டை விரலைப் பார்த்தார்; சித்திர விசித்திரத்திற்காக ஜாக்கெட்டின்

மேல் தைக்கப்பட்டிருந்த ஜிகினாவின் கீறல் விழுந்து லேசாக ரத்தம் கசிந்து கொண்டிருந்தது

"எங்கே அந்த மடையன்?" என்று கண்களில் தீப்பொறி பறக்க இரைந்தார்.

"இதோ இருக்கிறேன்!" என்று அவருக்கு எதிரே வந்து நின்றான் பீதாம்பரம்.

"உன்னை அழைக்கலேடா, மண்டு! - எங்கே அந்தக் காஸ்ட்யூம் டைரக்டர்?"

"இதோ வந்துவிட்டேன்!" என்று பறந்து வந்தார் அவர்.

"ஏன் ஐயா, உமக்கு நான் எத்தனை தரம் சொல்வது? - அம்மாவுக்குத் தைக்கிற ஜாக்கெட்டிலே மட்டும் ஜிகினா வேலை, கிகினா வேலை ஒன்றுமே செய்ய வேண்டாமென்று!"

"காஸ்ட்யூம் கொஞ்சம் 'ரிச்'சா இருந்தாத்தானே ஸார், அம்மா ராஜ வம்சத்தை சேர்ந்தவங்கன்னு படத்திலே தெரியும்.."

"இதோ பாரும், நீங்கள் எனக்கொன்றும் யோசனை சொல்ல வேண்டாம் - நான் சொல்கிறபடி

செய்யும்; போதும்!'' என்றவர், ''ஆக்ஸிடெண்ட், ஆக்ஸிடெண்ட்!'' என்ற அலறலைக் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினார்

லீலாவின் விரலிலிருந்து கீழே விழுந்த ஒரு சொட்டு ரத்தத்தை விழி பிதுங்கப் பார்த்தவண்ணம், "அம்மா கையிலேயிருந்து ரத்தமாக் கொட்டுதுங்க!" என்றான் சந்தர்ப்பத்தை எந்தப் பாடுபட்டாவது உபயோகித்துக் கொள்ளப் பார்த்த பீதாம்பரம்.

"பார்த்து இவ்வளவு நேரம் ஆகியும் பேசாமல் நிற்கிறாயேடா, மக்கு! - ஓடு ஓடு, உடனே நம்ம டாக்டருக்குப் போன் பண்ணி 'இம்மீடியட்'டா இங்கே வரச் சொல்லு!" என்று கூறிவிட்டு, ஜாக்கெட்டைத் தானே பக்குவமாகக் கழற்றிச் சுக்கல் சுக்கலாகக் கிழித்தெறிந்து விட்டு லீலாவின் கடைக்கண் வீச்சை எதிர்நோக்கி ஏங்கி நின்றார்.

அதற்குள் டாக்டர் விழுந்தடித்துக் கொண்டு ஓடி வந்து 'ஸெப்டிக்' ஆகாமலிருப்பதற்காக ஒரு 'இஞ்ஜக்ஷன்' கொடுத்தார். பிறகு, கீறல் விழுந்த இடத்தைத் துடைப்பதற்காக லீலாவின் கட்டை விரலைப் பிடிக்கப் போனார்.

அதற்குள் படாதிபதி முந்திக்கொண்டு, "நோ, நோ! அந்த வேலையெல்லாம் உங்களுக்கு ஏன் ஸார்? நான்

பிடிக்கிறேன்; நீங்கள் கட்டுக் கட்டுங்கள், போதும்!'' என்றார்

டாக்டர் புன்னகையுடன் அப்படியே செய்து விட்டுப் போனார்.

அவர் தலை மறைந்ததும் நட்சத்திரத்தைத் தூக்கி நாற்காலியின் மேல் உட்கார வைத்துவிட்டு, மின்சார விசிறியின் 'ஸ்விட் சைத் தட்டிவிட்டார் படாதிபதி. இதனால் விரலோடு உச்சியுங் குளிர்ந்த லீலா, "தாங்ஸ், உங்களுக்கு ரொம்பச் சிரமம் கொடுத்து விட்டேன்!'' என்றாள்.

"சரியாப் போச்சு, உன்னைத் தொட்டுத் தூக்க என்னை அனுமதித்த உனக்கு நானல்லவா 'தாங்ஸ்' சொல்ல வேண்டும்!'' என்றார் பத்மநாபன்.

பதிலுக்கு 'விலை உயர்ந்த சிரிப்'பொன்றைப் போனாற் போகிறதென்று உதிர்த்தாள் நட்சத்திரம்.

அவ்வளவுதான்; வந்தது மோசம் - படாதிபதியை யாரோ, எங்கேயோ மேலே மேலே தூக்கிக் கொண்டு செல்வது போலிருந்தது. "நான் எங்கே இருக்கிறேன்? எங்கே போகிறேன்?'' என்று அப்படியும் இப்படியுமாக அசைந்தசைந்து தடுமாறினார்.

நட்சத்திரம் திடுக்கிட்டெழுந்து, "இங்கேயேதான்; என் பக்கத்திலேயே தான்!" என்று அவரைத் தாங்கிப் பிடித்தாள்.

"ஆஹா, தன்யனானேன்! இனி எனக்கு இன்னொரு ஜன்மம் வேண்டியதில்லை; வேண்டியதே யில்லை - இதுவே ஏழாவது ஜன்மமாயிருந்து விட்டுப் போகட்டும், ஏழுமலையானே!" என்று வேண்டிக் கொண்டார் பத்மநாபன்

அந்தச் சமயத்தில் முன்னாலும் பின்னாலும் பார்த்துக் கொண்டு, எதையோ வேஷ்டியில் மறைத்து மறைத்து எடுத்துக்கொண்டு, ஒதுங்கி ஒதுங்கி உள்ளே வந்தான் பீதாம்பரம்.

"என்னடா, அது?" என்று அதட்டினார் படாதிபதி.

"அதாங்க, அம்மா ரொம்பக் களைப்பாயிருக் காங்களேன்னு ."

"ஓ, அதுவா? - என்ன இருந்தாலும் நீ புத்திசாலிடா! சோடா கலந்தாயா?" என்று வாயெல்லாம் பல்லாகக் கேட்டார் படாதிபதி பத்மநாபன்.

அதற்குள், "வேண்டாம் சோடா, எனக்கு 'ரா'வாவே குடித்துத்தான் பழக்கம்!" என்றாள் நட்சத்திரம் குறுக்கிட்டு.

"பார்த்தீங்களா, எனக்குத் தெரியுமே!" என்று கிளாஸை 'அம்மா'விடம் நீட்டிவிட்டுப் பீதாம்பரம் கையைப் பிசைந்தபடி வெளியே சென்றான்.

அவள் அதில் ஒரு மொடக்கு குடித்ததும் அதை அப்படியே தன் வாயில் தயவு செய்து உமிழுமாறு அவளை வேண்டிக் கொண்டார் பத்மநாபன். 'புனித மடைந்து போகட்டும்' என்று அந்த 'அம்மா'ளும் அப்படியே செய்தாள்.

"இன்று என்னமோ தெரியவில்லை; நான் நரி முகத்தில் தான் விழித்திருக்க வேண்டும்" என்றார் படாதிபதி.

மறுபடியும் தன் 'விலை உயர்ந்த சிரிப்'பொன்றைக் கலகலவென்று உதிர்த்தாள் லீலா.

இப்போது ஒருவரை மட்டுமல்ல; இருவரையுமே யாரோ எங்கேயோ தூக்கிக் கொண்டு மேலே மேலே, மேலே மேலே செல்வது போலிருந்தது.

அந்த நிலையிலேயே மிதந்தபடி அவளுக்கு முன்னால் மண்டியிட்டு முழங்கால்களின்மேல் தலையை வைத்துக் கொண்டு, "வெள்ளை - பாக்கெட்டில் கிடைக்காத என் ஒயினே, இன்று ஏன் இவ்வளவு அவசரம்?" என்று பத்மநாபன் நாக்குழறக் கேட்டார்.

"என் பிளாக் - மார்க்கெட் பணமே, இன்று நான் ஸ்பென்ஸருக்குப் போக வேண்டுமென்று இருந்தேன் அதனால்தான் "

"எதற்கு என் ஒயினே, இந்த அடிமையிடம் சொல்லக் கூடாதா?"

"வேறொன்றுமில்லை, ஸ்பான்ஜ் ஒன்று வாங்க வேண்டும்.."

"இவ்வளவுதானே? என்னிடம் நாவசைத்தால் போதாதா?"

"அசைக்கலாம் என்றுதான் இருந்தேன்; நாளைக் காலையிலேயே அது வேண்டியிருந்ததால் தாமதம் ஆகுமோ என்று பயந்தேன்!"

"நான் இருக்கப் பயம் ஏது? - ஒரு வார்த்தை சொன்னால் பொழுது விடிவதற்கு முன்னாலேயே கையில் 'ஸ்பான்ஜ்'ஜுடன் வந்து 'பாத் ரூம்' கதவை நான் தட்ட மாட்டேனா? - இன்றிரவு மட்டும் அன்று நான் சொன்னேனே..."

"அந்த அரோகரா பாங்க் ஸெக்டரி அனந்தசயனம் அய்யங்கார் இருக்கானே, அவன் சதா உன் ஞாபகமாகவே இருக்கான்; அதற்காக 'ஓவர் டிராப்ட்

*கேட்டால் ஒரு பைசாகூடக் கொடுக்க மாட்டேங்கிறான்! - என்ன செய்வது? - இன்றிரவு மட்டும் எனக்காக, இந்த ஏழைக்காக நீ அவனுக்குக் கொஞ்சம் இணங்கி விட்டால் ?"*

*"ஆமாம் போங்கள்! - ஊட்டியிலே எனக்கென்று ஒரு தனி பங்களா வாங்கித் தர வேண்டுமென்று சொல்லி எத்தனை நாளாச்சு?" என்று சற்றே பிகு செய்து கொண்டாள் நட்சத்திரம்.*

*"அட கடவுளே, உன்னிடம் நான் இதுவரை சொல்லவே யில்லையா?" என்று ஒருபோடு போட்டு விட்டு, 'ஹொஹ் ஹொய் ஹோஹோ' என்று சிரித்தார் அவர்*

*அந்தச் சிரிப்பைச் சகிக்காமல் கண்ணையும் காதையும் பொத்திக்கொண்டு, "என்ன, எனக்குத் தெரியாமலா வாங்கி விட்டீர்கள்?" என்று பரபரப்புடன் கேட்டாள் அவள்*

*"இல்லை, 'ரெயின்போ மாட'லில் புதிதாகவே ஒன்று அங்கே கட்டிவிடலாமென்று 'பிளான்' போடச் சொல்லியிருக்கிறேன்!"*

*"பலே! எங்கே, கை கொடுங்கள்!"*

"வேண்டாம் லீலா, இனி என்னால் தாங்க முடியாது!"

"எதை?"

"போ லீலா, அதை சொல்ல எனக்கு ரொம்ப வெட்கமாயிருக்கிறது!"

"ஈஸ் இட்? - அது கூட உண்டா என்ன, உங்களுக்கு?"

"மானத்தை வாங்காதே, இன்றிரவு ."

"சரி, தொலையட்டும் - பத்து மணிக்கு மேல் அவரை நேரே 'ட்ரீம் லேண்ட் ஹோட்டலுக்கு வந்துவிடச் சொல்லுங்கள்."

"அடி சக்கை, இப்போதுதான் எனக்கு உயிர் வந்தது - நம்பர்?"

"33!"

"ரைட்டோ! - அவளைப் பற்றி நீ ஒன்றும் 'வொரி' பண்ணிக்காதே - வயது அறுபதுக்கு மேலிருக்கும் 'டிஷ்யூ ஸாரி'யைக் கட்டிக்கொண்டு ரீடா ஹேவொர்த் 'ஸ்டை'லிலே ஒரு 'போஸ் கொடுத்தால் போதும், பய அப்படியே சொக்கி, 'மங்க்கி கிலாண்ட் இன்ஜக்ஷன்

மேலே இருந்த நம்பிக்கையையெல்லாம் விட்டுவிட்டு, பஞ்சகச்சத்தை இறுக்கியிறுக்கிக் கட்டிக்கொண்டு எடுப்பான் ஓட்டம்!"

"ஹீ ஹ்ற ஹி ஹ்ற ஹீ ஹீ! - உங்களுக்கு மட்டும் வயது பதினாறோ? - வாருங்கள், இன்னும் கொஞ்சம் நேரம் இருந்து நான் 'ஷூட்டிங்'கை முடித்து விட்டுப் போகிறேன்!"

"வேண்டாம் நீ போய் 'ரெஸ்ட்' எடுத்துக் கொள்; நான் ஷூட்டிங்கை 'கான்ஸல்' செய்துவிடுகிறேன்!"

இந்தச் சமயத்தில் நிசிலீலாவுக்கு ஏதோ 'ஆக்ஸிடெண்ட்' என்று கேள்விப்பட்ட 'ஜாலிவுட் ப்ரொட்யூஸர்'களில் சிலர் அங்கே ஓடோடியும் வந்து, "என்ன லீலா, என்ன நடந்தது?" என்று அவளைச் சூழ்ந்து கொண்டு, அங்கம் அங்கமாகத் தொட்டுப் பார்த்தார்கள்.

"ஒன்றுமில்லை; டாக்டர் 'ட்ரீட்மெண்ட்'டுக்கு அப்புறம் எல்லாம் சரியாப் போச்சு!" என்று மழுப்பிக் கொண்டே, அவர்களுடைய 'அனுதாபத்'திலிருந்து தப்ப நட்சத்திரம் விலகி விலகி நின்றாள்.

அடிபட்டவன் 'லைட் பா'யா யிருந்தால் அது விஷயம் வேறே! நட்சத்திரத்தின் விஷயத்தில் அப்படி இருந்துவிட முடியுமா?

"பின் ஏன் ஷூட்டிங்கைக் கான்ஸல் செய்கிறீர்க்ள?" என்று அவர்கள் குடைந்தார்கள்.

தர்மசங்கடமாகப் போய்விட்டது பத்மநாபனுக்கு.

"வேறொன்றுமில்லை ஐயா, 'ஸ்பான்ஜ்' வாங்க ஸ்பென்ஸருக்குப் போக வேண்டுமாம்; அதற்காகத்தான்..." என்று இழுத்தார்.

அதைச் சொல்லி அவர் வாய் மூடுவதற்குள், "எத்தனை டஜன் வேண்டும்? - இதோ, நான் இப்போதே போய் வாங்கிக் கொண்டு வந்து விடுகிறேன்!" என்று கிளம்பினார் ஒருவர்

"உம்முடைய காரைச் சொல்லும், அடிக்கு ஆயிரம் தடவை நிற்கும் - நானே போய் வாங்கிக் கொண்டு வந்து விடுகிறேன்!" என்று துடித்தார் இன்னொருவர்

மற்றொருவர், "அடாடா! இந்தச் சமயத்தில் 'லோகலுக்கு ஏரோப்ளேன் ஸர்விஸ்" மட்டும் இருந்திருந்தால் இந்நேரம் நான் அதில் பறந்தே போயிருப்பேன்!" என்றார் கைகளைத் தூக்கித் தூக்கிக் காட்டி.

"கடவுள் வஞ்சனைக்காரன், ஸார்! காக்கைக்கும் கருடனுக்கும் கொடுத்த சிறகுகளை எனக்கு மட்டும் கொடுத்திருந்தால் ?"

"என்ன பிரயோசனம்? ஸ்பென்ஸரைத்தான் இந்நேரம் மூடியிருப்பார்களே!" என்றார் பொறுமை யிழந்த பத்மநாபன் குறுக்கிட்டு

அதற்குள் ஏதோ ஒரு கார் கிளம்பும் சத்தம் கேட்கவே, எல்லோரும் ஏககாலத்தில் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தனர். 'என்றும் அழியாத கன்னி'யான மிஸ் லீலா அந்தக் காரில் இருந்தபடித் தலையைக் கொஞ்சம் வெளியே நீட்டி, "குட் நைட்!" என்று அத்தனை பேருக்கும் சேர்ந்தாற்போல் படுசிக்கனமாக ஒரே வார்தை சொல்லி வைத்தாள்

அட்சர லட்சம்' பெறும் அந்த வார்த்தையைக் கேட்டு ஓரளவு உச்சி குளிர்ந்தாலும் பத்மநாபன் விடவில்லை. "ஒன் மினிட், ஒன் மினிட்!" என்று கத்திக் கொண்டே காரை நோக்கி ஓடினார்.

மற்ற படாதிபதிகளும் அதே கூக்குரலுடன் அவரைப் பின் தொடரவே, நட்சத்திரம் பயந்து போய்க் காரை நிறுத்தவில்லை! என்ன இருந்தாலும் பெண்தானே? எத்தனை 'சைத்தான்' களுக்குத்தான் ஈடு கொடுப்பாள்?



நேற்று அடைந்த இந்த ஏமாற்றத்தைத் தவிர்ப் பதற்காகத்தான் இன்று எல்லாப் படாதிபதிகளுக்கும் முன்னால் பத்மநாபன் ஸ்பென்ஸருக்கு வந்திருந்தார்

இதை அறியாத ஓ.கே பத்மநாபன் வருவதைக் கூடக் கவனிக்காமல் ஒருவர் பின் ஒருவராகக் காரில் வந்து இறங்கும் 'ஜாலிவுட் ப்ரொட்யூஸர்க'ளுக் கெல்லாம் 'ஸல்யூட்' அடித்துக் கெ..ண்டிருந்தால் அவருக்கு எப்படி இருக்கும்?

"ஏய் இடியட், எட்றா வண்டியை!" என்று இரைந்தார்

"கொய்ட் ரைட், ரொம்பச் சரியாச் சொன்னீர்கள் - நீங்கள் வருவதைக்கூடக் கவனிக்காமல் நான் பாட்டுக்கு அவர்களைக் காக்கா பிடித்துக் கொண்டு இருந்தால் இடியட் இல்லாமல் என்னவாம்?" என்று அதை அன்புடன் அங்கீகரித்து, அடக்க ஒடுக்கத்துடன் அவருக்குக் காரின் கதவைத் திறந்து விட்டான் ஓ.கே

"இதோ பார் இந்தப் பயல்கள் நம்மை முந்தும்படி நீ விட்டுவிடக் கூடாது - என்ன ஆனாலும் சரி!" என்று அடித்துச் சொல்லி விட்டு, 'எதற்கும் நாம் மட்டும் கொஞ்சம் எச்சரிக்கையா இருப்போம்' என்று எண்ணியோ என்னமோ, பின் ஸீட்டுக் கதவைத் திறந்து கொண்டு ஏறி உட்கார்ந்தார்!

ஓ.கே. தனக்குக் கிடைத்த சந்தர்ப்பத்தை நழுவ விடுவானா? எடுக்கும்போதே எண்பது மைல் வேகத்தில் சென்றான்!

அவனுடன் மற்றப் படாதிபதிகளின் கார்களும் போட்டியிடவே, பாதசாரிகள் 'செத்தோமா, பிழைத்தோமா' என்று தெரியாமல் கலகலத்துச் சிதறினர்.

இந்தக் காட்சி படாதிபதிகளுக்குப் பலே தமாஷாயிருந்தது - இருக்கத்தானே இருக்கும்? - காட்சி ஆரம்பிக்க இரண்டு மணி நேரம் இருக்குமுன்பே கையில் நாலரையணாவுடன் 'கௌண்ட்'டருக்கருகே 'கியூ'வில் நிற்பர்களல்லவா அவர்கள்!

ஐந்தாம் அத்தியாயம்

# பாக்கியசாலி பத்மனாபன்!

**"த்**ரீ நாட் நைன் ஒன்!"

"நாட் போர் எய்ட் ஸிக்ஸ்!"

"ஸிக்ஸ்ட்டி ஸிக்ஸ் நைன்ட்டி நைன்!"

"டு ஒன் பைவ் பைவ்!"

"ஸெவன் நாட் ஸெவன் நாட்!"

*மாறி மாறி ஒலித்த இந்தக் கார் நம்பர்களையும், மாறி மாறி அடித்த அவற்றின் ஹாரன்களையும் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்தாள் குப்பச்சி.*

*இவள் யார் என்கிறீர்களா? - இவள்தான் பிரபல நட்சத்திரமான நிசிலீலாவின் தாயார். பூர்வாசிரமத்தில் 'குப்பச்சி'யாக இருந்து, பிற்காலத்தில் 'குஞ்சம்மா'ளாகப் 'புனர்ஜன்மம்' எடுத்தவள்.*

*"ஏய், எட்டிப் போடா!"*

*"உங்கப்பன் வீட்டு ரோட்டா! நட்ட நடுவே நிற்கிறாயே!"*

*"டிரிங், டிரிங்... டிரிங், டிரிங் ..!"*

*"ஹை ஹை... ஹை ஹை ஹை...!"*

*"பூ . புப்பூ! பூ, புப்பூ...!"*

*ஏற்கெனவே 'தன் பருவ கால நினைவுகள்' கலைந்த கோபத்தோடு பஞ்சணையின் மேல் உட்கார்ந்திருந்த குஞ்சம்மாளுக்கு மேற்படி குரல்களையும் 'விஸில்'களையும் கேட்டதும் ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்துவிட்டது அப்பொழுதும் அவள்*

மறக்காமல் வைரக் கம்மல்களைக் கழற்றி அவசரம் அவசரமாகத் துடைத்துப் போட்டுக் கொண்டு வராந்தாவுக்கு வந்தாள்; வாசல் பூராவும் ஒரே கார் மயமாக இருந்தது - ஒன்றையொன்று முந்தி உள்ளே நுழைய அவை போட்டியிட்டுக் கொண்டிருந்தன. அவற்றைக் கடந்து மேலே செல்ல முடியாமல் மாட்டு வண்டிகளும் ஜட்கா வண்டிகளும், சைக்கிள்களும் ரிக்ஷாக்களும் தவித்துக் கொண்டிருந்தன. போக்கு வரத்துப் போலீஸார் அடிக்கடி 'விஸில்' அடிப்பதும். நம்பர் வாரியாகக் கார்களை அழைத்து வரிசைக் கிரமமாக அவற்றை நிறுத்தி வைப்பதுமாக இருந்தனர்

"ஏன் இந்தக் கூட்டம், ஏன் இந்த ரகளை?" ஒன்றுமே புரியவில்லை, குஞ்சம்மாளுக்கு!

அதிலும் வருபவர்கள் சாதாரண ஆசாமிகளா யிருந்தாலும் பரவாயில்லை; படே படே ப்ரொட்யூஸர்கள்! - அவர்களை எப்படி வரவேற்பது? அத்தனை பேரையும் எங்கே உட்கார வைப்பது? - எந்த முறையில் அவர்களை உபசரிப்பது? - பெரிய பிரச்சனை யாகவல்லவா போய்விட்டது?

இத்தனைக்கும் பொழுதுகூட இன்னும் சரியாக விடியவில்லையே!

இந்தக் கவலையில் அவள் மூழ்கியிருந்த போது, "குட் மார்னிங்!" என்ற குரல் கேட்டுத் திரும்பினாள்.

நெற்றி வியர்வையை வழித்து நிலத்தில் விட்டபடி, இன்ஸ்பெக்டர் சிரித்துக் கொண்டே, "இன்று என்ன விசேஷம்?" என்று கேட்டார்.

தூக்கி வாரிப் போட்டது குஞ்சம்மாளுக்கு. "என்ன கேட்கிறீர்கள்? - விசேஷமா! இருங்கள், இதோ வந்து விட்டேன்!" என்று தடுமாறிக்கொண்டே அவள் மாடிக்கு ஓடினாள் - மகளைக் கேட்கத்தான்!

அங்கே அவள் படுக்கை காலியா யிருந்தது. ஏமாற்றத்துடன் திரும்பியபோது கையில் விளக்கு மாறுடன் வேலைக்காரி உள்ளே நுழைந்தாள்

"எண்டி, அம்மாவைப் பார்த்தாயா?"

"ஓ, பார்த்தேனே - பாத் ரூமுக்குப் போய் இருக்காங்க!"

அவ்வளவுதான்; ஓடோடியும் சென்று 'பாத் - ரூம்' கதவைத் தட்டினாள்.

"யாரது...?"

"நான்தாண்டி, கண்ணு! கொஞ்சம் கதவைத் திறேன்?"

கதவைத் திறந்த லீலா அதற்குப் பின்னால் மறைந்து நின்று, "என்ன அம்மா?" என்று கேட்டாள்.

அவள் எப்பொழுதுமே தன் அம்மாவுக் முன்னால் மட்டும் கொஞ்சம் வெட்கப்படுவது வழக்கம்!

இத்தனைக்கும் குஞ்சம்மாள் அதை விரும்புவது இல்லை. ஏனெனில், பெண் என்றால் அத்தனையும் தங்கம் என்றும், அந்தத் தங்கத்தின் மேல் வெட்கம் என்னும் மாசு படிந்தால் அது கறுத்து விடும் என்றும் அவள் எண்ணி வந்தாள். அதற்காகவே அவள் முறைப்படி தன் மகளை தனிப்பட்ட எவனுக்கும் அதுவரைக் கல்யாணம் செய்து கொடுக்காமல் இருந்தாள்.

எனவே, "இந்த வெட்கம் வேண்டாம், வேண்டாம்' என்று நான் உனக்கு எத்தனை தரம் சொல்லுவது? வாடி, வெளியே!" என்று அரை நிர்வாணமாயிருந்த அவளை இழுத்து,

"இன்று என்ன விசேஷம்?" என்று கேட்டாள்.

"ஒரு விசேஷமும் இல்லையே!" என்று விழித்தாள் அவள்.

*"ஏண்டி, என்னிடம் கூடவா சொல்லக் கூடாது?"*

*"சொல்ல ஏதாவது இருந்தால்தானேம்மா!"*

*"ஒன்றுமில்லாமலா தெரு பூராவும் அமர்க்களப் படுகிறது?"*

*"என்ன அமர்க்களம்?"*

*"வேறென்ன வேண்டும்? - காரோடு கட்டை வண்டி மோதுகிறது; ரிக்ஷாவோடு ஸைக்கிள் மோதுகிறது; ஜட்கா வண்டியோடு மாட்டு வண்டி மோதுகிறது..."*

*"மோதட்டுமே, நமக்கென்ன?"*

*"எல்லாம் உனக்காகத்தாண்டி! இல்லையென்றால் ஜாலிவுட் ப்ரொட்யூஸர்கள் அத்தனை பேரும் இங்கே வந்து ஏன் தவங்கிடக்கப் போகிறார்கள்?"*

*"அப்படியானால் 'என்ன விசேஷம்?' என்று அவர்களைத்தான் கேட்க வேண்டும்!"*

*"போடி திருடி! - இன்ஸ்பெக்டர் ஸார் என்னைக் கேட்டார்; நான் உன்னைக் கேட்கலாமென்று வந்தால்...?"*

*"அவர் இங்கே வருவானேன்?"*

*"எல்லாம் காரியமாகத்தான் வந்திருக்கிறார்! - ஒரு காரா, இரண்டு காரா? ஒராயிரம் கார் வந்து வாசலில் நிற்கிறது - போக்கு வரத்துக்கு இடைஞ்சலில்லாமல் அவர் பார்த்துக் கொள்ள வேண்டாமா?"*

*"அட பாவமே, நேற்று நான் ஒரு 'ஸ்பான்ஜ்' வாங்க வேண்டுமென்று சொன்னேன்; ஒருவேளை..."*

*"சரிதான், அதைத்தான் அத்தனை பேரும் வாங்கிக் கொண்டு வந்து நிற்கிறார்கள் போலிருக்கிறது!" என்று சிரித்தாள் குஞ்சம்மாள்*

*லீலா கால்களை மாறி மாறி உதறிக் கொண்டு, "ஐயோ, இப்பொழுது நான் என்ன செய்வேன்? எப்படி எனக்காக அவர்கள் போடும் போட்டியைத் தீர்த்து வைப்பேன்?" என்று கலங்கினாள்.*

*"அடி அசடே, அதைப்பற்றி நீ ஏன் கவலைப்பட வேண்டும்? - வருவதை வாங்கிப் போட்டு வைத்தால் போச்சு!"*

*"என்னமோ போம்மா, எனக்கு ஒன்றுமே பிடிக்க வில்லை!"*

“அது சரி, ‘எனக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை’ என்று என்னிடம் மட்டும் எத்தனை தடவை வேண்டுமானாலும் சொல்லு; ப்ரொட்யூஸர்களிடம் அப்படிச் சொல்லி விடாதே!”

“சரி, நீ போ! - நான் குளித்துவிட்டு வருகிறேன்...”

“இன்ஸ்பெக்டரிடம் என்ன சொல்ல?”

“எனக்குப் பிறந்த நாள் என்று சொல்லித் தொலையேம்மா!”

“நல்ல யோசனைதாண்டி, நான் வரேன்!”

குஞ்சம்மாள் திரும்பி இரண்டடிகள்தான் எடுத்து வைத்திருப்பாள் - அதற்குள் ஏதோ நினைத்துக் கொண்ட லீலா, “அம்மாம்மா, இன்னொரு விஷயம்...” என்று இழுத்தாள்.

“என்ன?” என்று கேட்டுக் கொண்டே அவளுக்கு எதிரே வந்து நின்றாள் குஞ்சம்மாள்.

“அவர்களிடம் நான் குளித்துக் கொண்டு இருப்பதாக மறந்து கூடச் சொல்லி விடாதேம்மா, எல்லாருமாகச் சேர்ந்து என் உடம்பைத் தேய்த்து விட இங்கேயே வந்துவிட்டாலும் வந்து விடுவார்கள்!”

*"இவ்வளவுதானே? - இன்னும் நீ படுக்கையை விட்டே எழுந்திருக்கவில்லை என்று சொல்லி விடுகிறேன் - போதுமா?" என்று 'பாத் ரூம்' - கதவைச் சாத்தி, 'எதற்கும் உள்ளே தாளிட்டு வைத்துக் கொள்; நல்லது!'' என்று குஞ்சம்மாள் எச்சரித்து விட்டுப் போனாள்.*

*அதற்கேற்றாற்போல் அன்று வராந்தாவில் கூடியிருந்த அத்தனை படாதிபதிகளும் ஒரே ஒரு ஆத்மாவைப் பற்றித்தான் பேசிக் கொண்டு இருந்தார்கள் - அந்தப் பேர்வழி யார் என்கிறீர்கள்? - படாதிபதி பத்மநாபன்தான்!*

*"உங்களுக்குத் தெரியுமோ?" என்றார் ஒருவர்.*

*''தெரியாதே!'' என்று கையை விரித்தார் இன்னொருவர்.*

*''நேற்று நம் பத்மநாபனுக்கு யோகம் அடித்திருக்கிறது ஸார், யோகம்!"*

*''குதிரைப் பந்தயத்தில் ரூபாய் பத்தாயிரம் கிடைத்ததே, அதைத்தானே சொல்கிறீர்கள்? எனக்குக் கூடத்தான் போன வாரம் இருபதாயிரம் கிடைத்தது..."*

"நான் அதைச் சொல்லவில்லை ஐயா, நேற்றுக் கோலாகலா ஸ்டூடியோவில் நம் லீலாவின் ஜாக்கெட்டை அவர்தான் கழற்றினாராம்!"

"எவர்?"

"மிஸ்டர் பத்மநாபன்தான்!"

"இருக்காது; ஒரு நாளும் இருக்காது!" என்று அடித்துச் சொன்னார் அவர்.

"இருந்தால்?" என்று விறைப்புடன் நிமிர்ந்து நின்றார் இவர்.

"என் காதை அறுத்துக்கொள்கிறேன்!" என்று அவர் சூள் கொட்டினார்.

"வேண்டாம்; ஏற்கெனவே உமக்கு ஒரு காது செவிடு!" என்று இவர் எச்சரித்தார்.

"அதனாலென்ன, என் லீலாவைப் பற்றி யார் என்ன சொன்னாலும் என் காதில் விழாமலிருப்பது நல்லதுதானே?" என்றார் அவர் ஆனந்த பரவசத்தோடு

அதற்குள் மற்றொருவர் ஓடி வந்து, "என்ன விஷயம், என் இந்த ரகளை?" என்று அவர்களைக் கவலையுடன் விசாரித்தார்.

"நீரே சொல்லும் - நேற்று நம் லீலாவின் ஜாக்கெட்டைப் பத்மநாபன் கழற்றினாரா, இல்லையா?" என்றார் அவர்களில் ஒருவர்.

அவ்வளவுதான்; "ஈஸ் இட்?" என்று வந்தவர் வாயெல்லாம் பல்லாகக் கேட்டார்.

"சரியாப் போச்சு, போங்கள்! - அந்த விஷயம் உங்களுக்குக் கூடத் தெரியாதா?"

"தெரியாதே ஸார், தெரிந்தால் அந்த ஜாக்கெட்டைக் கழற்றிய கைகளையாவது தொட்டு நான் மார்பில் ஒற்றிக்கொண்டிருப்பேனே!" என்று ஏங்கினார் இன்னொருவர்.

"இப்பொழுதும் ஒன்றும் குடி முழுகிப் போய் விடவில்லை; அன்றிலிருந்து இன்றுவரை அந்தக் கையை அவர் சாப்பிடும் போதுகூட அலம்புவது இல்லையாம்!"

"அவ்வளவு சீக்கிரம் அலம்ப எப்படி ஸார், மனம் வரும்? சாதாரணமாகக் கிடைக்கக் கூடிய பாக்கியமா அது?"

அந்தச் சமயத்தில் "என்ன பாக்கியம்?" என்று குறுக்கிட்டார் கனவான்.

*"அந்த வயிற்றெரிச்சலை ஏன் கேட்கிறீர்? பயல் நம்மை முந்திக் கொண்டு விட்டான், ஸார்!" என்றார் இன்னொரு கனவான்.*

*"அதற்குள் 'ஸ்பான்'ஜைக் கொண்டு போய்க் கொடுத்து விட்டானா, என்ன?"*

*"இல்லை; நேற்று அந்தப் பயல்தான் லீலாவின் ஜாக்கெட்டைக் கழற்றினானாம்!"*

*"நிஜமாகவா சொல்கிறீர்கள்?"*

*"ஆமாம் ஐயா, ஆமாம்!"*

*"அவன் கையை வெட்ட வேண்டும், ஸார்!"*

*"அவளே வெட்டாதபோது நீர் எதற்கு வெட்ட வேண்டும்?"*

*"இல்லையென்றால் அவளுக்காக நாம் காத்து இருப்பதுதான் மிச்சமாயிருக்கும்!"*

*"நேற்றுதான் போனாற் போகிறதென்று விட்டேன் - இன்று விடுவேனா?"*

*"எதை விட மாட்டேன் என்கிறீர்?"*

*அவ்வளவுதான்; வந்தது மோசம்! - அவர் தன் தவறை உணர்ந்தார் - என்ன தவறு என்கிறீர்களா? - தான் மட்டுந்தான் நிசி லீலாவுக்கு 'ஸ்பான்ஜ்' வாங்கிக் கொண்டு வந்திருப்பதாக அவர் நினைத்துக் கொண்டு இருந்த தவறுதான்! - பாவம், அங்கே கூடியிருந்த அத்தனை பேரும் அப்படித்தான் நினைத்துக் கொண்டு இருந்தார்கள் என்பது அவருக்குத் தெரியாது - என்ன செய்வார்? "எதை விடமாட்டேன் என்கிறீர்?" என்று அவர் திடீரென்று கேட்டதும் இவர் திடுக்கிட்டு, "ஒன்று மில்லை, ஒன்றுமில்லை..." என்று பின் வாங்கினார்.*

*"சரிதான், நீரும் 'ஸ்பான்ஜ்' வாங்கிக் கொண்டு வந்திருக்கிறீரா?"*

*"நானும் வாங்கிக் கொண்டு வந்திருக்கிறேன் என்று சொல்லுமே! 'நீரும் வாங்கிக்கொண்டு வந்திருக்கிறீரா?' என்று கேட்டு என் வயிற்றெரிச்சலை ஏன் கொட்டிக் கொள்கிறீர்?" என்றார் இவர்*

*இவர்களைப் போலவே அங்கிருந்த அனைவரும் ஒருவரிடம் ஒருவர் தங்களுக்குத் தெரியாமலே அகப்பட்டுக்கொண்டு விழித்த போது, "பாம்பாம், பம்பாம்பாம்!' என்று 'ஹாரன்' அடித்துக் கொண்டே போக்குவரத்துப் போலீஸாரைக்கூடப் பொருட் படுத்தாமல் படாதிபதி பத்மநாபனின் கார் வாயு வேக மனோ வேகமாக வந்து உள்ளே நுழைந்தது*

## ஆறாம் அத்தியாயம்

# "பாத பூஜை!"

படாதிபதி பத்மநாபனைக் கண்டதும் குஞ்சமாளுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை - அத்தனை படாதிபதிகளையும் வெளியே நிற்க வைத்து விட்டு, அவரை மட்டும் எப்படி மேலே அனுப்புவது என்ற குழப்பந்தான் அதற்குக் காரணம்

எனவே, ''வாருங்கள், வாருங்கள்!'' என்றாள் ஒரு தரம், ''நில்லுங்கள், நில்லுங்கள்!'' என்றாள் இன்னொரு தரம்.

''இதோ வந்து விட்டேன்!'' என்றாள் ஒருதரம்; இல்லை, வரவில்லை!'' என்றாள் இன்னொரு தரம்.

''உட்காருங்கள்!'' என்றாள் ஒரு தரம்; ''நிற்கிறீர்களே!'' என்றாள் இன்னொருதரம். அதற்குள் சேலை கட்டவிழ்ந்து விடவே, அவள் அதை அவசரமாகத் தூக்கிப் பிடித்துக் கொண்டு அள்ளிச் செருகத் தன் அறையை நோக்கி ஓடினாள்.

அதுதான் சமயமென்று மற்றவர்களை யெல்லாம் எரித்து விடுபவர்போல் பார்த்த வண்ணம் படாதிபதி பத்மநாபன் மாடிப் படிகளை நோக்கி விரைந்தார்.

''மறந்து விட்டீர்களே!'' என்றான் ஓ.கே.

*"எதை?" என்று 'வள்'ளென விழுந்தார் பத்மநாபன்*

*"எது முக்கியமோ அதை எடுத்துக் கொண்டு போக மறந்துவிட்டீர்களே, ஸார்! - இதோ பாருங்கள், 'ஸ்பான்ஜ்' இங்கேயே இருக்கிறது!" என்று காருக்குள் இருந்த அதை எடுத்துக் காட்டினான் அவன்.*

*"கொண்டாடா, முட்டாள்!" என்று கையை நீட்டினார் அவர்.*

*"சரிதான், நீங்களும் அப்படித்தானா?" என்றான் அவன்.*

*"எப்படி?"*

*"தாங்கள் செய்யும் தவறை மறைப்பதற்காக முதலாளிகளெல்லாம் வேலைக்காரர்களைத் திட்டுவது வழக்கம் அதற்கு..."*

*அவன் முடிக்கவில்லை; அதற்குள் பத்மநாபன் விரைந்து வந்து அவன் கையிலிருந்த 'ஸ்பான்'ஜை 'வெடுக்'கென்று பிடுங்கிக் கொண்டு, "மூடு வாயை!" என்று அதட்டினார்.*

*"வாயை மூடியிருந்தால் வாரத்துக்கு ஒரு இடம் நான் ஏன் வேலைக்கு வந்திருக்கப் போகிறேன்?" என்று முணுமுணுத்தான் ஓ கே*

"என்ன, உளறுகிறாய்?" என்று பத்மனாபன் உறுமினார்.

"ஒன்றுமில்லை!" என்று ஓ.கே. பல்லை இளித்தான்

இந்தச் சமயத்தில் "இதோ வந்துவிட்டேன், இதோ வந்து விட்டேன்!" என்று மறுபடியும் ஊளையிட்டுக் கொண்டே ஓடிவந்தாள் குஞ்சம்மாள்.

"நிஜமாகவே வந்து விட்டாயா?" என்று வயிற்றெரிச்சலுடன் கேட்டார் பத்மநாபன்

"ஆமாம், ஆமாம் - வாருங்கள், எல்லோரும் வாருங்கள்! உட்காருங்கள், எல்லோரும் உட்காருங்கள்! என்று ஹாலில் போடப்பட்டிருந்த ஸோபாக்களைக் காட்டினாள் அவள்.

இந்த 'வரவேற்பு' பத்மநாபனுக்குப் பிடிக்கவில்லை. ஏனெனில், மற்றவர்களைப் போல அவர் நிசிலீலாவுக்கு எப்போதாவது ஏதாவது கொண்டுவந்து கொடுப்பவரல்ல அந்த வீட்டின் தினசரித் தேவைகள் அத்தனையையும்; பூர்த்தி செய்து கொண்டிருப்பவர் - அதற்காகவே தாம் ஜன்மம் எடுத்திருப்பதாக நாளது வரை எண்ணிக் கொண்டிருப்பவர்! அப்படிப் பட்டவருக்கு அந்த வீட்டில் 'தனியிடம்' கிடைக்கவில்லையென்றால் ஆத்திரமாயிராதா? - அதிலும்,

நட்சத்திரத்துக்கு முதன்முதலாக 'ஸ்பான்ஜ்' வாங்கிக் கொடுக்கும் பாக்கியம் தனக்குந்தான் கிடைக்க வேண்டுமென்று அவர் விடிந்ததும் விடியாதது மாயிருக்கும் போதே விழுந்தடித்துக் கொண்டு ஓடி வந்திருக்கும்போது!

அவருடைய ஆத்திரத்தை அறியாத குஞ்சம்மாள் சந்தர்ப்பத்தைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள எண்ணித் தன் மேலாக்கைச் சற்றே நெகிழ விட்டுவிட்டுப் புன்னகை புரிந்தாள்.

பத்மனாபனோ அதைப் பொருட் படுத்தாமல் மேலே செல்லத் திரும்பி, இரண்டடிகள் எடுத்து வைத்தார்

இந்தத் 'தோல்வி'யைக் கண்டு அவள் இடிந்து விடவில்லை; "நில்லுங்கள் - அவள் அங்கே குளித்துக் கொண்டிருக்கிறாள் - நில்லுங்கள்!" என்ற பரபரப்புடன் கத்தி, அவரைத் தன் பக்கமாக இழுக்கப் பார்த்தாள்.

பாழும் ஓ.கே. சும்மா இருந்திருக்கக் கூடாதா? - "ஆஹா! நல்ல சமயம், ரொம்ப நல்ல சமயம்!" என்று அவன் அவரை உற்சாகப்படுத்த ஆரம்பித்துவிட்டான்.

பத்மநாபன் திரும்பினார். "ஓடுங்கள்! - சந்தர்ப்பத்தை நழுவ விடாதீர்கள் - ஓடுங்கள்!" என்று ஓ கே மேலும் மேலும் கூச்சலிட்டான்

அவ்வளவுதான் - ஓட முயன்ற தன்னைக் கை பற்றி இழுக்க வந்த குஞ்சம்மாளை அவர் ஒரு தள்ளுத் தள்ளிவிட்டு, நாலே எட்டில் மாடியை அடைந்து விட்டார்!

அங்கே, குளித்து முடித்து அப்பொழுதுதான் உடம்பைத் துடைத்துக் கொண்டிருந்த லீலாவைக் கண்டதும் பத்மநாபனுக்கு ஒரே ஏமாற்றமாயிருந்தது. "எல்லாம் அந்தக் குஞ்சம்மாளால் வந்த வினை!" என்று கையிலிருந்த "ஸ்பான்'ஜைக் கீழே வீட்டெறிந்தார்.

விஷயத்தைப் புரிந்துகொண்ட நட்சத்திரம் 'விலையுயர்ந்த சிரிப்பு'டன் அதை எடுத்து 'டீபா'யின் மேல் வைத்துவிட்டுத் தன் கையிலிருந்த 'டர்க்கி டவ'லை அவரிடம் போனாற் போகிறதென்று கொடுத்தாள்!

தீர்ந்தது கோபம் பத்மநாபனுக்கு; ஆனந்த பரவசத்துடன் தன் சிரமங்கள் அத்தனையையும் அந்தக் கணமே மறந்துவிட்டு, டவலுக்குக்கூட வலிக்காமல் அவள் உடம்பைத் துடைக்க ஆரம்பித்து விட்டார் அவர்.

அதற்குள் தலையைச் சீவிக் கொண்டு துடைத்த துண்டை வாங்கி மேலே போட்டுக் கொண்டு,

"உங்களுக்கு மட்டுமென்ன, எனக்குக் கூடத்தான் என் அம்மாவைக் கண்டால் பிடிக்க வில்லை!" என்று சொல்லிக்கொண்டே ஸோபாவில் சாய்ந்தாள் அவள்.

"ஏன் லீலா, ஏன்?" என்று 'இஞ்சி தின்ற குரங்கு' போல் கேட்டபடி, அவள் பாதகமலங்களுக்கருகே உட்கார்ந்தார் அவர்.

"அவள் சொல்கிறாள் - நான் ரொம்ப வெட்கப்படுகிறேனாம்!"

"நிஜமாகவா? - ஆச்சரியமாய்த்தான் இருக்கிறது!"

"என்னைக் கேலியா செய்கிறீர்கள், கேலி!" என்று அவள் 'ஊடல்' புரிந்தாள்.

"சீ கழுதை, உன்னையாவது நான் கேலி செய்யவாவது!" என்று அவள் கன்னத்தில் லேசாகத் தட்டிக் 'காதல்' புரிந்தார் அவர்.

"இல்லை, நீங்கள்தான் கழுதை!" என்று அவள் கொஞ்சினாள்.

"இல்லவே இல்லை, நீதான் கழுதை!" என்று இவர் மிஞ்சினார்.

இப்படியாக அவர்களுடைய 'காதல்' உதயமாகிக் கொண்டிருந்தபோது, அதை மறைக்க வந்த கருமேகத்தைப் போலக் கையிலே பர்மாப் பாதரட்சைகளுடன் ஓ.கே. அங்கு வந்து, "ஐயா இன்று தன்னைத்தான் மறக்கவில்லை; மற்றவற்றையெல்லாம் மறந்தே போய்விட்டார்!" என்றான்.

திடுக்கிட்டுத் திரும்பினார் 'ஐயா' - நல்ல வேளை, அன்று அவன் கையில் பாதரட்சைகள் இருந்தன - இல்லா விட்டால் அவனாவது, பிழைத்திருப்பதாவது! - அதிலும், நிசிலீலாவுக்கு முன்னால் அவன் இப்படி நடந்து கொள்வதென்றால்? - "வைத்துவிட்டுப் போடா, நாயே!" என்று அதட்டினார்.

"அந்த மட்டும் எனக்கு நன்றி விசுவாசம் இருக்கிறது என்றாவது ஒப்புக் கொண்டீர்களே, ரொம்ப சந்தோஷம்!" என்று சிரித்துக்கொண்டே அவன் பாதரட்சைகளை அவருக்கருகே வைத்துவிட்டு நகர்ந்தான்.

பத்மனாபன் உடனே எழுந்து கதவைச் சாத்தித் தாளிட்டுவிட்டு, "உனக்காகத்தான் இதைப் பர்மாவில் இருந்து தருவித்தேன்!" என்றபடி, கால்களில் ஒன்றைத் தானே மெல்லத் தூக்கி 'டீபா'யின்மேல் வைத்துச் செருப்பைத் துடைத்து மாட்டிவிட்டு, இப்படியும் அப்படியுமாகச் சாய்ந்து சாய்ந்து பார்த்தார்.

"எதைத்தான் நீங்கள் எனக்காக வாங்கவில்லை?" என்று அவருடைய சிண்டைத் தட்டி - இல்லையில்லை, அவருக்கேது சிண்டு? - வழுக்கைத் தலையைத் தட்டி விட்டாள் அவள்!

பத்மநாபன் உள்ளங் குளிர்ந்து, உச்சி குளிர்ந்து, "ஆஹா, வாரிக்கொண்டு போகிறது!" என்றார்

"யாரை?" என்று ஒன்றும் புரியாமல் கேட்டாள் அவள்.

"உன்னைத்தான் .!"

"என்னையா?"

"ஆமாம், உன் தங்க நிறக் காலுக்கு இந்த நீலநிறப் பட்டை ரொம்ப ரொம்ப ஜோராயிருக்கிறது."

"எங்கே, காட்டுங்கள்!" என்று அவள் எழுந்தாள்

"வேண்டாம், வேண்டாம் - நானே காட்டுகிறேன்!" என்று காலை அவள் முகத்துக்கு நேராகத் தூக்கிக் காட்டினார் பத்மநாபன்.

"ஐய, போங்கன்னா!" என்று அவள் விலகிய துண்டை இழுத்து மூடிக்கொண்டு, "ஆமாம், இன்னொரு காலுக்குப் போடவில்லையே: என்றாள்

"இதோ, காத்திருக்கிறேன்!" என்று அந்தக் காலையும் தூக்கித் தன் தொடையின் மேல் வைத்துக் கொண்டு, மற்றொரு செருப்பை எடுத்து மாட்டினார் பத்மநாபன்.

அவள் சற்றே எழுந்து இரண்டு கால்களையும் மாறி மாறிப் பார்த்துவிட்டு, "பரவாயில்லை - எங்கே, அந்தச் சிவப்பு நிறப் பட்டை போட்ட செருப்பை எடுத்து மாட்டுங்கள், பார்க்கலாம்?" என்றாள்.

"நான் ஒரு பாவி லீலா, நீ சொல்லும் வரை சும்மா இருந்துவிட்டேனே!" என்று தன்னைத் தானே நொந்துகொண்ட வண்ணம் அவசரம் அவசரமாக அவற்றைக் கழற்றிக் கீழே எறிந்து விட்டுச் சிவப்பு நிறச் செருப்பை எடுத்து மாட்டினார் பத்மநாபன்.

அதன் 'அழ'கைப் பத்மநாபனோடு தானும் பார்த்து அனுபவிக்க வேண்டும் என்பதற்காக லீலா எழுந்தாள். அதற்குள் இன்னொரு காலையும் தூக்கிச் செருப்பை மாட்டிவிட்டு, இரண்டு கால்களையும் இரு கைகளால் அள்ளிக் கன்னத்தில் ஒத்தி ஒத்தி எடுத்த வண்ணம், "ஆஹா, வாரிக் கொண்டு போகிறது! அப்படியே வாரிக் கொண்டு போகிறது!" என்று உட்கார்ந்தது உட்கார்ந்தபடி எழும்பி எழும்பிக் குதித்தார் படாதிபதி.

இந்தச் சமயத்தில், 'அடி ஆத்தா! அங்கே 'பிறந்த நாள்' என்று எல்லோரும் காத்துக் கொண்டு இருக்கிறார்கள் - இங்கே 'பாத பூஜை' நடந்து கொண்டிருக்கிறதே?'' என்ற குஞ்சம்மாளின் குரல் கேட்டது.

இருவரும் தூக்கி வாரிப் போட்டுக் கொண்டு எழுந்தார்கள்.

அறையின் இன்னொரு கதவைத் திறந்து கொண்டு, அவள் வியப்பே வடிவாய் எதிரே நின்று கொண்டிருந்தாள்!

''இங்கேயும் வந்து விட்டாயா, துணைக்கு?'' என்றார் படாதிபதி வெறுப்புடன்

''எனக்கேன் துணை? நீ போம்மா, இவரை நான் பார்த்துக் கொள்கிறேன்!'' என்றாள் நட்சத்திரம்.

குஞ்சம்மாள் 'சட்'டென்று முந்தானையை எடுத்துக் கண்களைத் துடைத்தபடி, ''என்னைப் பார்த்தால் உங்களுக்கு ஏண்டியம்மா இப்படி எட்டிக் காயாக் கசக்கிறது!'' என்று கலங்கிக்கொண்டே போய் விட்டாள்

அவள் சென்றதும், ''முதல் கதவை மட்டும் அல்ல; இரண்டாவது கதவையும் மறந்து விட்டீர்கள்!'' என்றாள் லீலா சிரித்துக் கொண்டே

தன் தலையில் தானே அடித்துக்கொண்ட வண்ணம், "சீசீ, எனக்கு மூளையே இல்லை; கொஞ்சங் கூட இல்லவே இல்லை!" என்று அலுத்துக்கொண்டே சென்று அந்தக் கதவையும் இழுத்துச் சாத்தித் தாளிட்டு விட்டு வந்தார் படாதிபதி.

"இப்பொழுதுதானா அது உங்களுக்குத் தெரிந்தது? - டூ லேட்!" என்றாள் நட்சத்திரம்.

"அது சரி, உன் அம்மாவை இப்பொழுது பார்த்தால் கூடவா இனிக்கும்?" என்று கேட்டுக் கொண்டே பத்மநாபன் உட்கார்ந்தார்.

"அவளுக்கும் உங்களுக்கும் ஆன வயதை யாராவது ஞாபக மூட்டினால்தானே?"

"ஏன், எங்களுக்குத் தெரியாதா?"

"தெரிந்தால் ஏன் இந்த கோலம்?"

"எல்லாம் உன்னால்தான்!"

"அது கிடக்கட்டும்! நேற்றிரவு என்ன நடந்த தென்று தெரியுமா, உங்களுக்கு?"

"எங்கே, என்ன நடந்தது என்று சொன்னால் தானே தெரியும்?"

"அதற்குள்ளே மறந்துவிட்டீர்களா? அப்படியானால் சொல்ல மாட்டேன், போங்கள்!"

"நானும் கேட்க மாட்டேன், போ!"

இருவரும் ஒருவரை யொருவர் ஒரு கணம் பார்க்காமல் இருந்தனர்; மறுகணம் ஒருவரை யொருவர் அறியாமல் பார்த்துப் புன்னகை பூத்தனர்.

"நான் 'டூ' விட்டுவிடுவேன்!" என்று அவள் அவரைப் பயமுறுத்தினாள்.

"நானும் 'டூ' விட்டுவிடுவேன்!" என்று அவர் அவளைப் பயமுறுத்தினார்.

"ஒன், டூ..."

"ஐயோ, வேண்டாம் - பேசு, லீலா பேசு!" என்று கெஞ்சினார் அவர்.

"கேளு ராஜா, கேளு!" என்று கொஞ்சினாள் அவள்.

"சரி, சொல்லு!"

"நிஜமாகவே உங்களுக்கு ஞாபகமில்லையா, ட்ரீம் லேண்ட் ப்ரோக்ராம்?"

"எப்படியிருக்கும், லீலா? உன்னைப் பார்த்தால் தான் எனக்கு எல்லாமே மறந்து போய் விடுகிறதே!"

"ஒஹோ, பார்த்தால்தான் மறந்து போகிறதா?"

"இல்லை, இல்லை நினைத்தாலே மறந்து போய்விடுகிறது!"

"அப்படிச் சொல்லுங்கள்! நேற்றிரவு நீங்கள் சொன்னபடி அந்த 'அரோகரா பாங்க் அனந்தசயனம்' ட்ரீம்லேண்டுக்கு வந்தான். நான் ஜன்னலுக்கு வெளியே பார்த்தபடி நின்று கொண்டிருந்தேன்..."

"எட்டித்தானே நின்றான்?"

"இல்லை, மெல்ல அவன் எனக்குப் பின்னாலே வந்து, 'லீலா, லீலா' என்றான்; நான் பேசாமல் இருந்தேன். 'ஏன் லீலா, பேசமாட்டேன் என்கிறாய்?' என்றான்; அதற்கும் பேசாமல் இருந்தேன். 'நேரங் கழித்து வந்ததற்காக ஒரு வேளை கோபித்துக் கொண்டாயோ?' என்றான்; எனக்குள் நானே சிரித்துக் கொண்டேன்.

'டாக்டர் வீட்டில் நேரமாகிவிட்டது, லீலா!' என்றான்; 'ச்சுக்கூ' என்று எனக்குள் நானே சொல்லிக் கொண்டேன்.

*தலையிலிருந்த பூக்களில் ஒன்றை எடுத்தான்; தடுக்கவில்லை. பின்னலைத் தொட்டான்; பிடுங்கிக் கொள்ள வில்லை. கதவைத் தாளிட்டான்; திறக்க வில்லை. விளக்கை அணைத்தான்; ஏற்ற வில்லை ."*

*"அட பாவி, அப்புறம்?"*

*"தேவலையே, 'மங்க்கி கிலாண்ட் இன்ஜக்ஷன்' என்று நான் நினைத்துக் கொண்டிருந்தேன்..."*

*"ம்... அப்புறம் என்ன நடந்தது, லீலா?... சீக்கிரம் சொல்லு!"*

*"அதை நான் ஏன் உங்களிடம் சொல்ல வேண்டுமாம்?"*

*"சொல்லு, லீலான்னா...!"*

*"போங்க ஸார்ன்னா...!"*

*"சொல்லப் போகிறாயா, இல்லையா?"*

*"சொல்லாவிட்டால் ..?"*

*"என் இதயம் சுக்குநூறாக உடைந்துவிடும்!"*

"அட பாவமே, என்னால் உங்கள் இதயம் ஏன் உடைய வேண்டும்? - இதோ சொல்லி விடுகிறேன் - அவர் என் தோளைப் பற்றினார்; நான் அவர் தோளைப் பற்றினேன் - இருவரும் எங்கள் சிரிப்பால் இருட்டை விலக்கிக் கொண்டு கட்டிலுக்கருகே சென்றோம்..."

"ஐயையோ!"

"அப்புறம் கேளுங்களேன் - அவர் என் காதோடு காதாக ரகசியம் பேசினார்; நான் அவர் காதோடு காதாக ரகசியம் பேசினேன்..."

"வெறுங் காது மட்டுந்தானே?"

"இல்லை, உதடுங்கூடத்தான்!"

அவ்வளவுதான்; படாதிபதி துள்ளி எழுந்தார் - "முடியாது; இதை என்னால் சகிக்கவே முடியாது!" என்று கத்தினார்.

அவள் கலகலவென நகைத்தபடி, அவரை இழுத்துத் தன் அருகே உட்கார வைத்துக் கொண்டு, "அதெல்லாம் ஒன்றும் நடக்கவில்லை! அந்தப் பயல் என் கையைப் பற்றினானோ இல்லையோ, 'ஐ ஆம் சாரி, ஐ ஆம் ஸாரி, ஐ ஆம் வெரி வெரி ஸாரி!" என்று

நீங்கள் சொன்ன மாதிரியே பஞ்சகச்சத்தை இறுக்கி இறுக்கிக் கட்டிக் கொண்டு பிடித்தான் ஓட்டம்!'' என்றாள்.

''பலே, அப்படிச் சொல்லு! - இந்தா, இதை நீ இப்போதே வைத்துக்கொள்!'' என்று ரூபாய் ஐயாயிரத்துக்கு உடனே ஒரு 'செக்' எழுதி அவளிடம் கொடுத்துவிட்டு, ''நான் வரட்டுமா?'' என்றார் படாதிபதி.

''ஐயோ, உங்களைப் பிரிந்து நான் எப்படி உயிர் வாழ்வேன்?'' என்று திடீரென்று உருகினாள் நட்சத்திரம்

படாதிபதி திடுக்கிட்டு, ''என்ன லீலா, என்ன உடம்புக்கு?'' என்று கவலையுடன் விசாரித்தார்.

''ஒன்றுமில்லை; நாளை 'ஷூட்டிங்'குக்கு 'டைலாக்' வரப்படுத்திக் கொண்டிருக்கிறேன் - போய் வாருங்கள்!'' என்று அவருடைய சந்தேகத்தை நிவர்த்தி செய்து வைத்ததோடு, சஞ்சலத்தையும் போக்கி வைத்தாள் நட்சத்திரம்!

ஏழாம் அத்தியாயம்

# "சீ, இதுவும் ஒரு வாழ்க்கையா!"

"டேய், முதலாளி வந்ததும் என்னை எழுப்புடா!" என்று ஏவலாளனுக்கு உத்தரவிட்டுவிட்டு, நாற்காலியில் சாய்ந்தபடி மேஜையின்மேல் காலை நீட்டிப் படுத்துக் கொண்டிருந்தான் பீதாம்பரம்.

'டிரிங்கிரிங், டிரிங்கிரிங்' என்று டெலிபோன் மணி அடித்தது.

"இது ஒரு சனியன், தூக்கத்தைக் கெடுத்துக் கொண்டு!" என்று கோபத்துடன் 'ரிஸீவ'ரை எடுத்துக் கீழே வைத்துவிட்டு மறுபடியும் கண்ணை மூடினான். அதற்குள், "அடேடே, இன்னிக்கு 'நைட்' எங்கே 'ப்ரோக்ராம்'னு மாலா மத்தியானம் 'போன்'லே சொல்றேன்னு சொன்னாளே! ஒரு வேளை அவளாயிருக்குமோ?" என்று கீழே வைத்த 'ரிஸீவ'ரைப் பரபரப்புடன் கையில் எடுத்து, 'ஹெல்லோ! பீதாம்பரம் ஸ்பீக்கிங், நீங்க யாரு?" என்று குழைந்தான்.

அடுத்த நிமிஷம் அவன் முகம் கறுத்தது. "காரா, வரட்டும், அனுப்புகிறேன்!' என்று 'ரிஸீவ'ரை டக்கென்று 'ரெஸ்'டின் மேல் வைத்துவிட்டு, "ஆமாம்,

இவர் வந்து எழுதிக் கிழித்துத்தான் இங்கே படம் எடுக்கப் போகிறார்களாக்கும்? கந்த லீலா கிருஷ்ண லீலாவா மாறிவிட்ட விஷயம் பயலுக்குத் தெரியாது போல இருக்கு; கார் வேண்டுமாம், காரு!'' என்று முணுமுணுத்துக் கொண்டே உட்கார்ந்தான்

அப்போது 'டக், டக்'கென்ற 'பூட்ஸ்' சத்தம் அவன் காதில் விழுந்தது. "வருபவன் யாராயிருக்கும்?" என்று அவன் யோசிக்க ஆரம்பித்ததும் ஏவலாளன் ஓடோடியும் வந்து, "ஸார்! டைரக்டர் வருகிறார், ஸார்!" என்றான் பரபரப்புடன்.

''வந்தால் என்னடா? அவனைக் கண்டதும் உன்னை யார் எழுந்திருக்கச் சொன்னது? இனிமேல் என்னைக் கண்டால்தான் நீ எழுந்திருக்க வேண்டும்; வேறு யாரைக் கண்டாலும் எழுந்திருக்கக் கூடாது - போ, போய் உட்கார்!" என்று பீதாம்பரம் இரைந்தான்.

இந்தச் சமயத்தில், ''என்ன கோபம், இன்று பீதாம்பரத்துக்கு?" என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தார் டைரக்டர் சோமு.

"அதிருக்கட்டும், இன்று 'பிரியாணிப் போட்டி'யில் யாருக்கு வெற்றி?" என்று பீதாம்பரம் கேட்டான்

''கேட்க வேண்டுமா, எனக்குத்தான்! ரெண்டு பிளேட் மட்டன், ரெண்டு பிளேட் சிக்கன்,

ரெண்டே செகண்ட்லே அவுட்!" என்று உற்சாகத்துடன் சொல்லிக் கொண்டே அவனுக்கு எதிரே உட்கார்ந்தார் டைரக்டர்.

"அடி சக்கை! மற்றப் பயல்களெல்லாம் ?"

"ரெண்டாவது பிளேட்டிலேயே திக்கு முக்காடிப் போய் விட்டார்கள்!"

"ஆமாம், இதிலே இருக்கிற 'ஸக்ஸெஸ்' உங்களுக்குப் படத்திலே இல்லையே!"

"அதற்கு நான் என்ன செய்யட்டும், கந்தசாமி யல்லவா கதை எழுதுகிறான்?"

"அவனைக் கேட்டால் 'நான் என்னமோ சரியாத்தான் எழுதுகிறேன்; டைரக்டர்தான் எல்லா வற்றையும் மாற்றி விடுகிறார்' என்கிறானே?"

"சரிதான், அதைக்கூட நான் செய்யவில்லை யென்றால் முதலாளி என்னைப் பற்றி என்ன நினைப்பார்?"

"அதற்காக உங்களுடைய 'புத்திசாலித்தன'த்தைக் கதையில் தானா காட்ட வேண்டும்? 'டைரக்ஷ'னில் காட்டலாமே!"

"நல்ல ஆளய்யா, நீர்! நம்முடைய அதிகார மெல்லாம் கதாசிரியர் கந்தசாமியிடம்தான் செல்லும்; நட்சத்திரங்களிடம் செல்லுமா? அவர்களிடம் தான் ஆனானப்பட்ட முதலாளியே தோப்புக்கரணம் போட வேண்டியிருக்கிறதே, நான் என்ன செய்ய?"

"அதுவும் உண்மைதான்; அடுத்தாற் போல் வேறு எங்கேயாவது 'சான்ஸ்' கிடைக்க வேண்டுமென்றாலும் அவர்களுடைய தயவுதானே நமக்கு முதலில் வேண்டியிருக்கிறது?"

"நமக்கு மட்டுமென்ன? முதலாளிக்குக் கூடத்தான்! அவர்கள் இல்லையென்றால் அவருக்கு யார் காலணா கொடுப்பார்கள்?"

"அதற்காக நீங்கள் 'வெறும் பிரியாணி வீர'னாகவே இருப்பதா?"

"வேறே வழி? ஒரு நல்ல 'பைனான்ஷியர்' கிடைக்கிற வரையிலே அப்படித்தான் இருக்கணும்!"

"பைனான்ஷியர் சும்மா கிடைத்து விடுவானா? நான் ஒரு மாலாவைத் தயார் பண்ணி வெச்சிருக்காப் போல நீங்க ஒரு பாலாவைத் தயார் பண்ணி வெச்சிருக்கணும்!" என்றான் பீதாம்பரம் கொஞ்சம் 'குத்த'லாக.

''எனக்குத்தான் இன்னும் கல்யாணமே ஆகலையே!'' என்று பதிலுக்குக் 'குத்த'லாகக் சொல்லிக் கொண்டே, ஒரு ஸிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்தார் சோமு.

பீதாம்பரம் திடுக்கிட்டு, ''மாலா என் மனைவி என்று உங்களுக்கு எப்படித் தெரிந்தது?'' என்று கேட்டான்.

"அதிருக்கட்டும், பாலா என் தங்கை என்று உமக்கு எப்படித் தெரிந்தது?" என்று திரும்பிக் கேட்டார் சோமு.

"நீங்களாவது சேர்ந்து வாழ்கிறீர்கள்; நாங்கள் இருவரும் சேர்ந்துகூட வாழ்வதில்லையே? அதனால் தான் எப்படித் தெரிந்தது என்று கேட்கிறேன்!"

"என்ன ஐயா, இப்படிக் கேட்கிறீரே! பாம்பின் கால் பாம்புக்குத் தெரியாதா? எல்லாவற்றையும் 'அட்ஜஸ்ட்' பண்ணிக் கொள்ளக்கூடிய ஆற்றல் எங்களுக்கு இருக்கிறது; உங்களுக்கு இல்லை. அவ்வளவு தான் உமக்கும் எனக்கும் உள்ள வித்தியாசம்!"

"என்ன இருந்தாலும் இரவில் சில சமயம் இங்கே வந்து என் மனைவி எனக்கு முன்னால் பல 'பெரிய மனிதர்க'ளுடன் பழகும்போது .."

"அதனாலென்ன, பொன்னைப் பொதுவுடைமை யாக்கும் வரை நாமெல்லாம் பெண்ணைப் பொது வுடைமையாக்க வேண்டியதுதான்! இல்லை யென்றால் நீங்கள் இங்கே 'ப்ரொடக்ஷன் மானேஜ'ராக நீடிக்க முடியுமா? நான்தான் 'டைரக்ட'ராக நீடிக்க முடியுமா?"

"அதுதான் எனக்கும் கவலையாயிருக்கிறது; வரவர மாலாவின் முகத்தைப் பார்த்தால் எனக்கே பிடிக்க வில்லை. "

'ஏன், என்ன காரணம்?"

"காலத்தால் அவள் அழகு தேய்ந்துகொண்டிருக்கு ஸார், தேய்ந்து கொண்டிருக்கு!"

"இவ்வளவுதானே? மொச்சை மாவைப் போட்டுத் தினந்தோறும் முகத்தை அலம்பச் சொல்லுங்கள்; சரியாய்ப் போய்விடும்!"

"பாலா அப்படித்தான் செய்கிறாளா, என்ன?" என்று பீதாம்பரம் ஆவலுடன் கேட்டான்.

"செய்யாவிட்டால் வேலையில்லாத் திண்டாட்டம் மலிந்திருக்கும் இந்தக் காலத்தில் என் கால்களுக்கு பூட்ஸ்கூடக் கிடைக்காதே, சுவாமி!"

"அதற்காகச் சில பைத்தியக்காரர்களைப் போல வேலையில்லாத் திண்டாட்டம் ஒழிய வேண்டுமென்று நீங்களும் கூச்சல் போட ஆரம்பித்து விடாதீர்கள்; அது ஒழிந்தால் பணக்காரர்கள் ஒழிந்து விடுவார்கள். அப்புறம் நீங்களும் நானும் பெண்ணைப் பொது வுடமை யாக்க முடியாது; அப்படி ஆக்கினாலும் அவளைச் சுவைத்துத் துப்பப் 'பெரிய மனிதர்'களும் இருக்க மாட்டார்கள்!"

"ஆமாம் ஆமாம், திடீரென்று மூளைக்கோ உடலுக்கோ வேலை கொடுக்க நம்மால் முடியுமா? அப்படியே கொடுத்தாலும் 'பாண்டியாக்' சவாரியும் பங்களா வாசமுந்தான் கிடைக்குமா?"

"அப்படிச் சொல்லுங்கள்; வாழ்க்கை வாழ் வதற்கே!" என்று அவருடைய கையைப் பிடித்துக் குலுக்கியபடிக் கத்தினான் பீதாம்பரம்

"ஒரு சிறு திருத்தம்; 'வாழ்க்கை எது வேண்டு மானாலும் செய்து வாழ்வதற்கே!" என்று மாற்றிச் சொல்லுங்கள்!" என்று "பிரியாணி நிறைந்த தம் தொந்தி'யை ஆறுதலுடன் தடவி விட்டுக் கொண்டே எழுந்தார் டைரக்டர் சோமு.

"இன்றிரவு 'கால்-ஷீட்' போட்டிருக்கே! ஷூட்டிங்'குக்காக 'ரிஹர்ஸல்' எதுவும்..."

*"எல்லாம் 'ஸெட்'டிலே பார்த்துக் கொள்ளலாம்; நீர் சீட்டாட வருகிறீரா?"*

*"அதற்குத்தான். ஒன்றுக்கு மூன்று உதவி டைரக்டர்கள் இருக்கிறார்களே! உங்களையும் சேர்த்தால் நாலு; போதாதா சீட்டாட்டத்துக்கு?"*

*"சரி, நீர் தூக்கம் போடப் போகிறீராக்கும்?"*

*"போடாவிட்டால் இரவு பூராவும் முதலாளியை வளைய வளைய வந்து எப்படி ஸார், 'காக்கா' பிடிக்க முடியும்?"*

*"அப்படியே செய்யுங்கள்; ஆனால் ஒன்று..."*

*"என்ன அது?"*

*"அடுத்த மாதம் எடுக்கப் போகும் 'க்ரூப் டான்'ஸுக்கு மட்டும் நீர் இப்பொழுதே ஏற்பாடு செய்து விட வேண்டும்."*

*"அதெல்லாம் எதற்கு, ஸார்? கோஷ்டி நடனங்களைப் பார்த்துப் பார்த்துத்தான் ஜனங்களுக்கு அலுத்துப் போய்விட்டதே?"*

*"அவர்கள் கிடக்கிறாாகள்; 'க்ரூப் டான்ஸ்' இல்லையென்றால் முதலாளியின் உபயோகத்துக்குப்*

புதுப்புது முகங்கள் எப்படிக் கிடைக்குமாம்? - நீர் இன்றே நூறு குட்டிகளுக்குச் சொல்லி அனுப்பும்!"

"நூறு ஏன் ஸார்? தொண்ணூற்றெட்டு போதாதா?"

"இன்னும் ரெண்டு?"

"மாலாவும் பாலாவும்!"

"நல்ல யோசனைதான், இன்றே ஆள் அனுப்பி விடுகிறீரா?"

"அடுத்த வாரம் அனுப்புகிறேனே!"

"ஊஹூம்; ஒரு மாத காலமாவது ரிஹர்ஸல்' வைக்க வேண்டும்.."

"இப்பொழுதுதானே சொன்னீர்கள், 'ரிஹர்ஸ' லெல்லாம் 'ஸெட்'டிலே பார்த்துக் கொள்ளலாம் என்று?"

"அது வேற விஷயம்; இது வேறே விஷயம்!"

"எல்லாம் ஒன்றுதான், ஸார்; அது 'டைலாக்'கை ஒப்பிப்பது; இது கையையும் காலையும் ஆட்டுவது - அவ்வளவுதானே?"

"இருந்தாலும் நூறு பெண்கள் நம்மைச் சுற்றித் 'தொம், தொம்' என்று குதிப்பது சாதாரணமாகக் காணக் கூடிய காட்சியா? அபூர்வமான காட்சியாச்சே, ஐயா! அதை ஒரே நாளில் இழந்துவிட உமக்கு எப்படித்தான் மனம் வருகிறதோ?"

"பாவம் முதலாளி! - உங்களுடைய 'எண்டர் டெய்ன்மெண்ட்'டுக்காக அவர் அல்லவா செலவழிக்க வேண்டியிருக்கிறது!"

"இல்லை; ஸ்ரீமான் பொதுஜனம் செலவழிக்கிறார்!"

"அந்த அப்பாவியை ஏன் ஸார், அடிக்கடி வம்புக்கு இழுக்கிறீர்கள்! அவருக்கு என்ன தெரியும்?"

"எது தெரியாது? எல்லாம் தெரியும். ஆனால் 'கலை' என்ற ஒரு வார்த்தை இருக்கிறதே, அதுதான் அன்றிருந்து இன்றுவரை அவரிடமிருந்து நம்மைக் காப்பாற்றி வருகிறதாக்கும்!"

"அப்படியானால் அந்த ஒரு வார்த்தை வாழ வில்லையென்றால் நாமெல்லாம் வீழவேண்டியதுதான் என்று சொல்லுங்கள்!" என்றான் பீதாம்பரம்.

இந்தச் சமயத்தில், "கலை உங்களுக்காக வாழ்வதை விடத் தற்கொலை செய்து கொள்வது எவ்வளவோ மேல்!" என்ற ஒரு குரல் கேட்டது

"இருவரும் ஏககாலத்தில் திரும்பிப் பார்த்தனர்.

"ஓ, கதாசிரியர் கந்தசாமியா!" என்றான் பீதாம்பரம் எகத்தாளமாக.

"ஆமாம், பயங்கர மிருகங்கள் பல வாழும் பணக் காட்டில் பசிக்காக ஒரு பிடி உணவு தேடிப் பிரயாணம் செய்யும் ஒரே பாதசாரி நான்; ஒரே மனிதன் நான்!'' என்று அவன் சொன்னதற்கு இன்னும் கொஞ்சம் அழுத்தம் கொடுத்தான், வயிற்றில் ஈரம் இல்லா விட்டாலும் நெஞ்சில் ஈரம் இருந்த அந்த எழுத்தாளன்!

வழக்கம்போல் அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல், ''கார் அனுப்புவதற்குள் வந்து விட்டீர்களே!'' என்றான் வஞ்சக நெஞ்சனான பீதாம்பரம்.

"இனி நீங்கள் கார் அனுப்ப மாட்டீர்கள் என்று தெரியும்; அதனால்தான் என் கால்களைக் கொண்டே வந்துவிட்டேன்;"

"ஏனாம்?"

"கதையோ முடிந்து விட்டது; இனி காசு வாங்க வேண்டியதுதானே பாக்கி!"

இந்தச் சமயத்தில் டைரக்டர் சோமு குறுக்கிட்டு, "கதையை நீங்கள் முடித்து விட்டால் போதுமா ஸார், நாங்கள் அதைப் பார்க்க வேண்டாமா?" என்றார்.

"ஐயோ பாவம், அதற்கெல்லாம் உங்களுக்கு எங்கே நேரம் இருக்கப் போகிறது? என் கணக்கைத் தீர்க்கும் வரை, அல்லது என் கதையைத் திருடி அதை வேறு யாருடைய பெயரிலாவது வெளியிடும் வரை, 'உங்கள் கதையை நாங்கள் இன்னும் பார்க்க வில்லை" என்று நொண்டிச் சமாதானம் சொல்லிக் கொண்டு இருக்கப் போகிறீர்கள் - அவ்வளவுதானே?"

"கேட்டீரா, பீதாம்பரம்? இவருடைய கதையைப் பார்ப்பதற்காக என் அருமையான காலத்தை நான் வீணாக்க வேண்டுமாம்!"

"அவன் கிடக்கிறான், வாழத் தெரியாதவன் - நீங்கள் வாருங்கள், போவோம்!" என்று 'வெறும் பிரியாணி வீர'னை வீராப்புடன் அழைத்துக் கொண்டு நடந்தான் 'காக்கா'.

"சீ, இதுவும் ஒரு வாழ்க்கையா!" என்று அலுத்துக் கொண்டான், மானத்தைத் தவிர வேறொன்றையும் பெரிதாக மதிக்காத ஏழை கந்தசாமி.

# பூர்வ கதை

முத்தாயி கண்ணிழந்தவள்; அவளுக்குக் கைக் கோலாயிருந்தான் அவளுடைய ஒரே மகனான ரத்தினம் இவர்கள் இருவருக்கும், இவர்களைச் சேர்ந்த இன்னும் சிலருக்கும் மனிதர்கள் அளிக்காத ஆதரவை ஒரு 'தெருவிளக்கு' அளித்துக் கொண்டிருந்தது அதன் மடியிலே இவர்கள் தலைமுறை தலைமுறையாக வாழ்ந்து வந்தனர்.

முத்தாயி பிச்சைக் காரியாயிருந்து பணக்காரர் களின் 'பரலோக வாழ்க்கை'க்கு உதவி வந்தாள்; ரத்தினம் கப்பல் கூலியாயிருந்து அவர்களுடைய 'இகலோக வாழ்க்கை'க்கு உதவி வந்தான்

இவர்களுக்கு 'அடுத்த வீட்டுக்காரர்'களாய் இருந்தவர்கள் அந்தோணியும் ஆரோக்கியசாமியும். அந்தோணி ரத்தினத்தின் நண்பன்; ஆரோக்கிய சாமி இவர்கள் அனைவருக்கும் 'ஞான போதகன்'

ஒரு நாள் வேலையில்லாப் பட்டதாரி ஒருவன் - அவன் பெயர் ஓ.கே - தினசரிப் பத்திரிகையொன்றைப் பிரித்து, அதிலுள்ள 'வாண்டெட் கால'த்தைப் பார்த்துக் கொண்டே வருகிறான்.

கண்ணிழந்த முத்தாயி அவனைக் கவனிக்க வில்லை; கண்ணிருந்த அவனும் அவளைக் கவனிக்க வில்லை - இருவரும் மோதிக் கொள்கின்றனர். இதனால் ஏற்பட்ட தகராறில் ரத்தினம் ஓ கே யை அறைகிறான். அதைப் பொருட்படுத்தாமல் ஓ.கே. அவன் முதுகில் தட்டிக் கொடுத்து,

"இதோ பார், பிரேமலீலா பிக்சர்ஸாருக்கு டிரைவர் தேவையாம் - இன்றே நான் அவர்களுடைய டிரைவராவேன்; அப்புறம் நடிகனாவேன்; அதற்குப் பின் படாதிபதியாவேன்," என்று உற்சாகத்துடன் கத்திக் கொண்டே ஓடுகிறான் - ரத்தினத்துக்கு அவன் 'குணாதிசயம்' விளங்காத புதிராயிருக்கிறது.

பிரேமலீலா பிக்சர்ஸாரின் 'ப்ரொடக்ஷன் மானேஜ'ரான பீதாம்பரத்தைச் சந்திக்கிறான் ஓ.கே. படாதிபதி பத்மனாபன் படுக்கையறையை விட்டு இன்னும் வெளியே வரவில்லை யென்றும், அவர் வரும்வரை 'விஸிட்டர் ஹா'லில் போடப்பட்டிருக்கும் 'பெஞ்ச்'சின் மேல் மற்றவர்களுடன் சேர்ந்து உட்காரும் படியும் ஓ.கே. யிடம் சொல்கிறான் பீதாம்பரம்.

'அதனாலென்ன, நான் வேண்டுமானால் பூபாளம் பாடி அவரை எழுப்புகிறேன்!" என்று ஓ.கே. அவனைப் பிடித்து அப்பால் தள்ளி விட்டுப் படாதிபதியின் அறைக்குள் நுழைய முயல்கிறான்

அவனை முந்திக்கொண்டு உள்ளே நுழைந்த பீதாம்பரம் திடுக்கிட்டு நிற்கிறான் - காரணம், அங்கே பல பெண்கள் 'கோபியர் வேஷ'த்தில் இருக்க, படாதிபதி பத்மநாபன் கையில் 'அண்டர் கிரவுண்ட் பிராந்தி'யுடன் கண்ணன் வேஷத்தில் இருந்ததுதான்!

இதைத் தவறாகப் புரிந்துகொண்ட அசட்டுப் பீதாம்பரம், "கந்த லீலாதானே எடுக்கப் போவதாகச் சொன்னார்? இப்போது நடக்கும் ஒத்திகையைப் பார்த்தால் கிருஷ்ணலீலாவாயிருக்கும் போல் இருக்கிறதே!" என்று முணுமுணுக்கிறான்

ஓ.கே. குறு குறுக்கிட்டு, "கந்த லீலாவில் இரண்டு ஹீரோயி'னுக்கு மேல் வேலையிருக்காதே! - போதுமா, முதலாளிக்கு?" என்று கண்ணடிக்கிறான். இதனால் இருவருக்கும் வாக்குவாதம் ஏற்படுகிறது.

படாதிபதி பத்மநாபன் உள்ளே இருந்தபடி, "அங்கே என்ன சத்தம்?" என்று அதட்டுகிறார். அதுதான் சமயமென்று அவருடைய அறைக்குள் பாய்ந்து விடுகிறான் ஓ.கே. அவனைத் தடுத்து நிறுத்த முடியாத பீதாம்பரம், "நம்பர் 93 போன் ப்ளீஸ்! நம்பர் 93 போன் ப்ளீஸ்!" என்று கத்துகிறான்.

பத்மநாபன் அவனை அடக்கி விட்டு, "யாரப்பா, நீ?" என்று ஓ கே.யை விசாரிக்கிறார். "நான் டிரைவர்;

பத்திரிகையில் உங்கள் விளம்பரத்தைப் பார்த்தேன்.." என்று ஆரம்பிக்கும்போதே அவனுடைய தோற்றத்தையும் துணிவையும் கவனித்த பத்மநாபன் அவனுக்கு உடனே வேலை கொடுத்து விடுகிறார்!

அதிலிருந்து பத்மநாபனைக் 'காக்கா' பிடிக்கும் விஷயத்தில் பீதாம்பரத்தக்கும் ஓ.கே.ய்க்கும் கடுமை யான போட்டி இருந்து வருகிறது எனினும் வெற்றி மட்டும் ஓ.கே.ய்க்கே கிடைத்து வருகிறது.

இந்த நிலையில் பத்மநாபன் அன்புக்கு - இல்லை, தொழிலுக்குப் பாத்திரமான பிரபல நட்சத்திரம் ஒன்று - அதன் பெயர் நிசிலீலா பேரபாயத்துக்குள்ளாகிறது - அதாவது, ஜாலிவுட்டைச் சேர்ந்த 'கோலாகலா ஸ்டூடியோ'வில் அந்த விபத்து நேருகிறது.

படாதிபதியின் அத்தனை பேரையும் 'தூண்டிற் புழு' வாய்த் துடிக்க வைத்த அந்த விபத்து என்ன வென்றால், ஒரு நாள் 'ஷூட்டிங்' முடிந்ததும், தான் அணிந்து கொண்டிருந்த ஜிகினா ஜாக்கெட்டை அவள் அவசர அவசரமாகக் கழற்றுகிறாள். அப்போது அந்த நட்சத்திரத்தின் விரல்களில் ஒன்றில் ஜிகினா கீறிவிடுகிறது. அதிலிருந்து கசிந்த ரத்தத்தைக் கண்டதும் படாதிபதி பத்மநாபன் தனது கண்களில் ரத்தம் கசிய ஓடோடியும் வந்து, அந்த 'ஆக்ஸிடெண்'டுக்குக் காரணம் என்னவென்று கேட்கிறார்

'ஸ்பென்ஸ'ரை மூடுவதற்குள் ஓடிப்போய் 'ஸ்பான்ஜ்' வாங்கிவிட வேண்டுமென்று நினைத்த தாகவும், அதற்காக 'மேக்கப்'பைக் கலைத்த வேகத்தில் அந்த 'ஆக்ஸிடெண்ட்' நேர்ந்து விட்டதாகவும் திருவாய் மலர்ந்தருளுகிறது நட்சத்திரம்

"ஆஹா! உனக்கா, ஸ்பான்ஜா? அதை நீயா வாங்கப் போக வேண்டும்? ஐயையோ! இந்த அடிமைக்கு அந்த பாக்கியம் கிட்டக்கூடாதா? அதற்கு நான் கொடுத்து வைக்கக் கூடாதா?" என்று பத்மநாபன் பிரலாபிக்க, அதற்குள் மற்ற படாதிபதிகள் அவளுக்கு நேர்ந்த அபாயத்தைக் கேள்வியுற்று அங்கே விழுந்தடித்துக் கொண்டு ஓடி வர, விஷயம் அம்பலமாகி விடுகிறது.

அதாவது, 'நட்சத்திரம் நாளை குளிப்பதற்கு ஸ்பான்ஜ் வேண்டும்' என்ற விஷயந்தான்! கிடைத்தற்கரிய இந்தச் சந்தர்ப்பத்தை நழுவ விடுவார்களா, படாதிபதிகள்?

மறுநாள் காலை ஏகப் போட்டி! 'நட்சத்திரத்துக்கு ஸ்பான்ஜ் வாங்கிக் கொடுக்கும் பாக்கியத்தை அடையத்தான்! - அதிலும், படாதிபதிகள் போட்டி என்றால் கேட்க வேண்டுமா? - நூற்றுக்கணக் கான கார்கள் அந்த நட்சத்திரத்தின் பங்களாவை நோக்கிப் பறக்கின்றன - போக்குவரத்தே ஸ்தம்பித்து

*விடுகிறது - லீலாவும் அவள் தாயார் குஞ்சம்மாளும் செய்வது இன்னதென்று அறியாது திகைக்கின்றனர்.*

*போலீஸ் வருகிறது; 'இன்று என்ன விசேஷம்?" என்று கேட்கிறது.*

*'ஸ்பான்ஜ் விஷய'த்தை வெளியே சொன்னால் சிரிப்பார்களே என்று 'குழந்தைக்குப் பிறந்த நாள்' என்று சொல்லிச் சமாளிக்கிறாள் குஞ்சம்மாள்.*

*கடைசியாகப் பத்மநாபன் எல்லோரையும் முந்திக் கொண்டு மேலே செல்கிறார்.*

*பூர்வ ஜன்ம புண்ணியத்தால் 'ஸ்பான்ஜ்'ஜை முதன் முதலில் கொடுக்கும் பாக்கியத்தைப் பெறுவதுடன், கையோடு கொண்டுவந்திருந்த பர்மா பாதரக்ஷைகளையும் வர்ணவாரியாகப் பிரித்து, தானே - தன் கையாலேயே - அந்த நட்சத்திரத்தின் கால்களுக்கு வலிக்காமல் மாட்டி, இப்படியும் அப்படியுமாகத் திருப்பி அழகு பார்க்கிறார்; அவள் பாத கமலங்களை எடுத்துக் கன்னத்தில் ஒத்திக் கொண்டு 'ஜன்ம சாபல்ய'மடைகிறார்.*

*இந்தச் சமயத்தில் அரோகரா பாங்க் அனந்த சயனம் அய்யங்காரைப் பற்றிய பேச்சு அவர்கள் இருவருக்கு மிடையே அடிபடுகிறது.*

விஷயம் என்னவென்றால், அதற்கு முதல் நாள் இரவு 'ட்ரீம்லேண்ட் ஹோட்ட'லில் அய்யங்காரைச் சந்தித்து அளவளாவுமாறு நட்சத்திரத்தை வேண்டிக் கொண்டிருந்தார் பத்மநாபன் எல்லாம் பணத்துக் காகத்தான்!

அறுபதாவது வயதைத் தாண்டி விட்டிருந்தாலும் அய்யங்கார்தான் அரோகரா பாங்கியின் 'சர்வ வல்லமையுள்ள ஸெக்ரடரி.' அதற்காக 'அண்டர் கிரவுண்ட் பிராந்தி'யால் அவர் 'தாக'த்தையும், அழகை விலை கொடுத்து வாங்கும் நட்சத்திரங்களால் அவர் 'மோக'த்தையும் தீர்ப்பது படாதிபதி பத்மநாபனின் தவிர்க்க முடியாத கடமையாய் இருந்து வந்தது.

ஆயினும் லீலாவைப் பொறுத்தவரை, 'தனக்குத் தெரிந்து' அவள் வேறு யாருடனும் தொடர்பு வைத்துக் கொள்வதை அவர் விரும்பவில்லை அய்யங்காரோ, 'இருக்கவே இருக்கிறது, மங்க்கி கிலாண்ட் இன்ஜக்ஷன்' என்ற நம்பிக்கையில் அவள்தான் வேண்டுமென்று கேட்டு விட்டார் - என்ன செய்வார் பத்மநாபன், பாவம்! "சரி" என்று வேண்டா வெறுப்புடன் சொல்லி விட்டார்.

இவர்கள் இருவரையும் திருப்தி செய்யும் நோக்கத்துடன் நட்சத்திரம் அன்றிரவு 'ட்ரீம் லேண்ட் ஹோட்டலுக்குச் சென்றாள். தன் சாகசத்தால்

மக்கள் எழுத்தாளர் விந்தன்தான் தமிழில் தலித் இலக்கியத்தின் தந்தை - முன்னோடி என்று சொல்லத் தகுந்தவர். அவர் பதித்துள்ள தடம் வலுவானது. அவர் நிறுவியுள்ள பாதை நீண்டு செல்வது.

*- டாக்டர் தி. தயானந்தன் பிரான்சிஸ், 1998*

ஏழைகள், மத்தியதர வர்க்கத்தில் கடை நிலையில் உள்ளவர்கள் ஆகியோரின் உரிமைக் குரலை விந்தன் எதிரொலிக்கிறார். பொழுதுபோக்கிற்காக இலக்கியம் படைக்கிறேன் என்று கூறுபவர்களை விந்தன் மிகக் கடுமையாகச் சாடுகிறார். 'மணிக்கொடி' காலத்திலேயே கதைகள் எழுதத் தொடங்கியவர் விந்தன். இருந்தாலும், அவர் இலக்கியத்தை இந்திர சபையின் ஊர்வசியாகக் காணவில்லை. அதை நமது சமூகத்திலேயே காண்கிறார்.

*- எஸ். தோத்தாத்ரி, 1978.*

எழுத்தாளர் விந்தனின் படைப்புகளும் சரி, படைப்புகளின் நோக்குகளும் சரி.. அவை, கடல் போன்ற விரிந்த பரப்பு. நிலவுலகம் துளைக்கும் சுரங்கம் போன்ற ஆழம். மலை, வானம் போன்ற பேரகற்சியுடையவை!

*-கா. அப்பாத்துரையார், 1982*

கிட்டத்தட்ட மூன்று தலைமுறைக் காலமாக எழுத்தாளர் விந்தன் எழுதிய கதைகள் உயிரோடுதான் இருக்கின்றன. இந்தக் கதைகளிடையே அவர் இன்றும் வாழ்கிறார்.

*- ஆர்.வி., 1982*

பாத்திரப் படைப்பில் விந்தன் வல்லவர். 'மாட்டுத்தொழுவம்' சிறுகதை படித்துவிட்டு, 'ஒரு பெண்ணின் நினைவுகளை - உணர்ச்சிகளை ஒரு ஆணால் இவ்வளவு தத்ரூபமாக எப்படி எழுத முடிகின்றது?' என்று நான் வியந்து போனேன்.

*- ஸ்விட்லின் பிரபாகரன், 1998*

விந்தன் எழுதுகோலை ஒரு ஆயுதமாகவே ஏந்தியவர். அதுவும் நற்காரியங்களுக்குப் பயன்படும் நல்லாயுதமாகவே அதை அவர் ஏந்தியிருக்கிறார்.

*- கவிஞர் கா. மு. ஷெரீப், 1982*

பாட்டாளி மக்களின் குறைகளை உள்ளது உள்ளபடி எழுத்தின் மூலம் படம் பிடித்துக் காண்பிக்கும் எழுத்தாளர் யாராவது இருக்கிறார்களா என்றால், அவர்தான் விந்தன் என்று தயங்காமல் கூறலாம். மனித சமுதாயத்திற்கு வேண்டிய பல உயர்ந்த நோக்கங்களையும் சிந்திக்கத்தக்கக் கருத்துகளையும் விந்தன் தமது கதைகளில் அடக்கியிருக்கின்றார்.

*- சாவி, 1974*

இயல்பாக நிகழ்ச்சிகளை இலக்கியமாக்கிக் காட்டுவதில் வல்லவர் விந்தன். நமக்கே அவை நிகழ்ந்திருக்கும்; அவதிப்பட்டிருப்போம். அவருடைய எழுத்துகளில் அவற்றைப் படிக்கும் போது நம்மையறியாமலேயே அவற்றை அனுபவித்துத் திடுக்கிடுவோம்.

*- டி.கே. சீனிவாசன், 1982*

விந்தன் பல்லாயிரக்கணக்கான எழுத்தாளர்களில் ஒருவர் அல்லர்; லட்சத்தில் ஒருவர்; இலக்கணத்துக்கு இலக்கணமானவர் அவர்.

*- திருமதி டாக்டர் கஸ்தூரி ராசா, 1998*



அய்யங்காரையே பின் வாங்கி ஓடும்படிச் செய்துவிட்டு வந்தாள்! பத்மநாபன் இதை அறிந்ததும் ஆனந்த பரவசத்துடன் அவளிடம் ரூபாய் ஐயாயிரத்துக்கு ஒரு 'செக்' எழுதிக் கொடுத்துவிட்டுக் கம்பெனிக்குத் திரும்புகிறார்

அங்கே மானத்தைப் பெரிதாக மதிக்கும் கந்தசாமி என்னும் அப்பாவி எழுத்தாளன் ஒருவன், பணத்தைப் பெரிதாக மதிக்கும் டைரக்டர் சோமுவையும், ப்ரொடக்ஷன் மானேஜர் பீதாம்பரத்தையும் 'மனிதர்க'ளாக்க முயன்று கொண்டிருக்கிறான்.

(விந்தனின் திரை உலக அனுபவங்களை வெளிப்படுத்தும் இததொடா நிறைவு பெறவில்லை)

